*Ūl̲iyan̲*

*Malar 8, ital̲ 7*

*November 08, 1927*

Record no. 148

சென்னைப் பதிவு எண் கரு0௬. | இதன் விலை அணா ஒன்றரை. | தந்தி விலாசம்:—"OOLIAN"

# ஊழியன்

**சந்தா விபரம்.**

| | |
|---|---|
| வருடச் சந்தா ... | ௩—0—0 |
| ஆறுமாதச் சந்தா ... | ௧—0—0 |
| வெளிநாடு வருடச் சந்தா | ௪—0—0 |

செவ்வாய்தோறும் நிகழ்வது.

**விளம்பர விகிதம்.**
அங்குலம் ௧க்கு வாரம் ௧க்கு 0—௪—0
நீடித்த விளம்பரம் அங்.௧க்கு ௧—0—0
ஒப்பந்த விளம்பரவிகிதத்திற்குக்காரியா
தருக்கு எழுதவும்.

ஆசிரியன்—ராய. சொக்கலிங்கன்.

குடிதழீஇக் கோலோச்சும் மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கும் உலகு. —திருக்குறள்.

கல்லாண்மை யென்ப தொருவற்குத் தானபிறந்த
இல்லாண்மை யாக்கிக் கொளல். —திருக்குறள்.

மலர் அ. | காரைக்குடி. பிரபவ-ஹூ ஐப்பசி-மீ உ௬ உ (அ—௧௧—உஎ) | இதழ் எ

## மலர் மணம்.

## "உலகத்தின் போக்கு"

(வ. ரா.)

இப்பொழுது உலக முழுதிலும் சோர்வு நிறைந்து கிடக்கின்றது. சீர்திருத்தக்காரர்கள் முன்னே அடிவைத்துச்செல்ல அஞ்சுகின்றார்கள். பிற்போக்குக்கான சபைகள், அமைப்புகள் யாவும் ஒன்றுகூடி, சதிசெய்து, முற்போக்கைத் தடுத்துநிற்கின்றன. உண்மை, எங்கேயோ, ஒளிந்து கொண்டுநிற்கின்றது. கடவுளுக்குக் கண்ணில்லையோ வென்று கூறும் வண்ணம், கொடிய நிகழ்ச்சிகள் உலகத்தில் நேர்ந்து வருகின்றன. இத்தகைய நிகழ்ச்சிகள் யாவுக்கும் அடித்தளமாய் நிற்கும் மனப்பான்மை ஆராயத்தக்கது.

* * *

ஏசுநாதரைப்பற்றி ஒரு குறிப்பு உண்டு. அந்தக் குறிப்பு இப்பொழுது மிகவும் பொருத்தமுடைத்து. தமது இளமைப் பருவத்திலேயே, ஏசுநாதர் படைப்பின் உண்மையையும் கடவுளின் தன்மையையும் உணர்ந்துகொண்டார். ஒரு உத்தமன் தோன்றினால், உலகத்தில் பாபம் குறைந்துபோகுமல்லவா? எனவே, ஏசுவின் மனப்பான்மையைக் கண்டு, சைத்தானுக்குக் கோபம் மூண்டது. ஏசுவின் முன்னர், சைத்தான் தோன்றினான்.

* * *

"உன் கண் முன்னர் இருக்கும் உலகத்தைப் பார்க்கின்றாயா? இது பார்வைக்கு அடங்கிய உலகம். நீ பார்க்க முடியாத உலகங்கள் பல இருக்கின்றன. நீ கடவுளை வெறுத்து, எனக்கு ஆட்படுவாயாகின், நீ காணும் இந்த உலகமட்டுமல்ல, மற்றெல்லா உலகங்களும் உனக்கு அடிபணிந்து, உனது ஆட்சியை ஏற்று நடக்குமாறு, நான் ஏற்பாடு செய்வேன். ஆனால், நீ மட்டும், எனக்கு அடிமையாயிருத்தல் வேண்டும்" என்று ஏசுவினிடம் சைத்தான் கூறிற்று.

* * *

"கிட்ட வராதே, சைத்தான்! உன்னுடைய சூழ்ச்சியும் நயவஞ்சகத் தூண்டுதலும் என்னிடம் பலிக்கமாட்டா. உன்னுடைய தன்மையை நான் அறிவேன். எட்டப்போ" என்று ஏசு, சைத்தானிடம் கடிந்து கூறினார். பின்பு ஏசுநாதர், இரவும் பகலும் நாற்பது நாட்கள் பட்டினி கிடந்தார். அசத்தியத்தின் சூழ்ச்சிவலைக்குள் அகப்படாமல், உண்மையைக்கண்டு, உண்மையை உலகத்தாருக்கு ஏசு எடுத்து உபதேசித்தார்.

* * *

இந்தக் குறிப்பு செறிந்த பொருள் கொண்டதாகும். தூய்மை வாழ்வு வாழத்துணியும் ஒவ்வொரு மனிதனுக்கும் மேற்கூறிய இடுக்கண்களைப்போல, பல நேருவது இயற்கை. சீர்திருத்தத்தில் ஆவல்கொண்டவர்கள், தங்கள் வாழ்க்கையில் சில சமயங்களில் தடுமாற்றம் அடைவது மிகவும் சாதாரண நிகழ்ச்சியாகும். உலகத்தைப் பிடித்து நிற்கும் சோர்வுக்குக் காரணம் என்ன?

ஐரோப்பியப் போர் நிகழ்ந்தது. அதன்பொருள் என்ன? ஐரோப்பா முழுதும் சமுதாயமாய்ப் பரவிக்கிடந்த, ஆனால் ஒளிந்துகொண்டிருந்த, அற்ப உணர்ச்சிகள் யாவும் மேலெழுந்து நின்றன. தடைபட்டு, தேக்கமுற்றுக் கிடக்கும் உணர்ச்சிகள் யாவும் எப்பொழுதேனும் வெளிவர வேண்டியது அவசியமாகும். சந்தேகமும், சுயநலமும், எல்லையற்ற ஆசையும், பிறரை அவமதிக்கும் தன்மையும்—இவையாவும் ஒன்று சேர்ந்து, போர் என்ற நிகழ்ச்சியிலே, மடைதிறக்கப்பட்டன.

* * *

கழிவது மலமாயினும், மனிதன் பலவீனமடைவான். இது யாவருக்கும் தெரியும். ஐரோப்பியப் போர் மூலமாய், ஐரோப்பியர்களின் அற்ப உணர்ச்சிகள் யாவும் மடிந்து போகத் தலைப்பட்ட போதினும், ஐரோப்பியர்கள் புதியதொரு சக்தியுடன் வாழமுடியவில்லை. உலகத்தாரின் வாழ்வை இப்பொழுது ஆட்டிவைப்பது ஐரோப்பியர்களின் வாழ்க்கையாகும். எனவே, ஐரோப்பியர்கள் தங்கள் வாழ்க்கையில் சோர்வை அடைந்திருப்பதால், உலகமெங்கணும் சோர்வு நிறைந்து நிற்கின்றது.

* * *

உலகத்தில் இந்தியாவும்—நமது நாடே—ஒரு பகுதிதானே? உலகத்தின் பொதுச்சோர்வு இந்தியாவையும் பீடிக்காமலிருக்க முடியுமா? எனினும், இந்தியாவின் சோர்வுக்கு மற்றுமொரு காரணமுண்டு. எந்த மனிதனும், தான் கொண்ட முயற்சிக்கு ஏற்றதென்று தான் நினைக்கும் பயனில் ஒரு சிறிதேனும் அடையாமற்போனால், சோர்வடைவான். இது இயல்பு. இந்த இயல்பை ஒட்டி, இந்தியா சோர்வடைந்து நிற்கின்றது.

* * *

இமயமலை முதல் கன்னியாகுமாரி வரையில், இந்தியர்கள் ஒருமனப்பட்டு, சுயராஜ்யதாகமடைந்து, உலகத்திற்குப்புதிதும், ஆனால் இந்தியாவிற்கு மிகப்பழையதுமான சத்தியாக்கிரகச்சாதனத்தைக் கைக்கொண்டு, தங்கள் விடுதலையின் பொருட்டு பெரு முயற்சி செய்தார்கள். சமுதாயமான இத்தகைய நிகழ்ச்சி சென்ற இரண்டாயிரம் ஆண்டுகளாக இந்தியாவிலே நிகழ்ந்ததில்லை என்றே கூற வேண்டும். குறியுள்ள வாழ்க்கையை நாடி, அதற்கென பெருமுயற்சி செய்து தோல்வியுற்று, மனப்புண் அடைந்து, சோர்வு பெற்று இந்தியா தவிக்கின்றது.

* * *

"சீர்திருத்தங்கள் தேவையில்லை; முன்னோர்களின் வாழ்க்கை முறையே போதுமானது; தேவையான முற்போக்கை, முன்னோர்கள் அடைந்துவிட்டார்கள். எனவே முற்போக்கு எதுவும் இந்தியாவுக்கு, இப்பொழுதுமட்டுமல்ல, எப்பொழுதும் தேவையில்லை" என்று, சோர்வும் பலவீனமும், போலிபக்தியும் நிறைந்தவர்கள் வாய் வேதாந்தம் பேசுவார்கள். இந்த நிலைமையில், தூய்மை வாழ்க்கையை விரும்புபவர்கள் என்ன செய்ய வேண்டும்?

* * *

ஏசுநாதர் செய்தது போல, காந்தி இப்பொழுது செய்துவருவதைப் போல, சீர்திருத்தக்காரர்கள் செய்வார்களானால், நாட்டின் சோர்வும் ஏக்கமும் பறந்து போய்விடும். நாட்டிலே, துண்டுதுண்டாய்ச் சிதறிக்கிடக்கும் சீர்திருத்தக்காரர்களுக்கு இந்த எச்சரிக்கை தேவை என நான் கருதுகின்றேன்.

* * *

பாரதப்போர் துவக்குமுன்னர், தேர்த்தட்டில் உட்கார்ந்து கொண்டிருந்த அருச்சுனன் சோர்வடைந்தது சரித்திரப் பிரசித்தமான நிகழ்ச்சியாகும். கண்ணனிடம் அருச்சுனன் போலி வேதாந்தம் பேசிய கதையை உலகத்தார் அறிவர். அந்த சமயத்தில் கண்ணன் என்ன சொன்னார் என்பதைமட்டும் நம்மில் யாவரும் மனத்தில் இருத்திக் கொள்ள வேண்டும். "வில்லினை எடடா, இந்தப் புல்லியர் கூட்டத்தைப் பூழ்தி செய்திடடா" என்று கண்ணன் அருச்சுனனுக்குத் திருவாய் மலர்ந்தருளினார். சோர்வைப்போக்குவதற்கு இணையற்ற மருந்து செயலாகும்.

* * *

சீர்திருத்தக்காரர்களின் வாழ்க்கையில், துக்கத்தில் அணிகலன்களாய் நிற்பவை வறுமையும் ஏனையோர் அவமதிப்புமாகும். பின்னர், சீர்திருத்தக்காரர்களின் உறுதியைச் சோதிப்பது அவர்களுடைய சோர்வாகும். எவ்வளவு தூரம் சோர்வடைகின்றார்களோ, அவ்வளவு வரையில்தான் கோரிநிற்கும் சீர்திருத்தம் மெய்யென்று, சீர்திருத்தக்காரன் கொள்ள வேண்டும். சக்தியின் மறுபக்கம் சோர்வாகும். எனவே, சோர்வைக்கண்டு, எவரும் அஞ்ச வேண்டாம்.

* * *

சோர்வுக்குப் பின்னர், குழப்பம் நிறைந்த, தெளிவற்ற செயல்கள் தோன்றக்கூடும். சோர்வைக் காட்டிலும் குழப்பம் கொடிய நிலையாகும். மனிதனுக்கு இயற்கையாயுள்ள சுகத்தைக் காட்டிலும் ஜன்னி நல்லதாகுமா? ஜன்னியை யாவரும் பார்க்கக்கூடும். சுகமாயிருப்பவர்களை எவரும் க்ஷேமம் விசாரிப்பதில்லை. எனவே, ஜன்னி நிலைமை உயர்ந்ததாமா? சத்தியாக்கிரகத்தையும் சத்தியாக்கிரகிகளையும் சோதிக்கும் காலம் நெருங்கிவருகின்றது என்பது எனது கருத்து.

* * *

இப்பொழுது நம்மையும் உலகத்தாரையும் பிடித்து நிற்கும் சோர்வு நீடித்திருக்க முடியாது. எந்த நிகழ்ச்சியும் இயற்கைச்சட்டத்தைக்கடந்து நிற்க, இயங்க முடியாது. சோர்வுக்கு நாம் அஞ்ச வேண்டாம். ஆனால் இந்தச் சோர்வுக்குப் பின்னர் நிச்சயமாய் எழப்போகும் எழுச்சிக்காலத்தில், நல்லவர்களுக்கும் அறிவாளிகளுக்கும் வேலை மிக உண்டு.

* * *

உலகமனைத்தும் வெறிபிடித்துத் தவறான பாதையில் செல்லுமாயில், நம்மால் அதாவது தனி மனிதர்களால் என்னாகும் என்று நாம் ஒவ்வொருவரும் எண்ணி மலைக்கவேண்டாம். உத்தமர்களைப் பின்பற்றுவதுதான் உலகமாகும். உலகத்தார் வல்லார்கள் வகுத்த பாதைகளின் வழியாகத்தான் செல்லுவார்கள். எனவே, உலகம் சோர்வடைந்து போயிற்று என்று வீண்பழி சுமத்தாமல், எம்மட்டில் அதைத் திருத்தக்கூடுமோ, அவ்வளவு வரையில் உண்மையாளர்கள் உழைத்தே தீர வேண்டும்.

* * *

காலம் கடக்கக் கடக்க, காந்திபேரில் எனக்கு அளவிலா அன்பு உண்டாகின்றது. அவரைப்போல, உலகத்தை அறிந்தவர் வேறு ஒருவர் உண்டோ என்பது எனது ஐயம். உலகம் எவ்வளவுக்கெவ்வளவு மதி இழந்து நிற்கின்றதோ, அவ்வளவுக்கவ்வளவு, காந்தி அதன்பேரில் அன்பு செலுத்துகின்றார். கடவுளின் தன்மை இதுவல்லவா? உலகத்தின் போக்கை மாற்ற, இது நிகரில்லாத மருந்தல்லவா?

—

# வாரக்கடிதம்.

"இளமை இந்தியா"வின் உ௯-க௦-உ௯ இதழில் மகாதேவ தேசாய் அவர்கள் எழுதியுள்ள வாரக்கடிதம் வருமாறு:—

கோச்சி சமஸ்தானம்.

"எங்கே இருள் ஏகபோகமாய் ஆட்சி செய்வது வெளிப்படையோ, அங்கே அந்த இருளின் அளவை இவ்வளவினது என்று நான் கணக்கிடுவதால், பயன் என்ன? இந்த சமஸ்தானத்தில், சென்ற சில ஆண்டுகளில், தீண்டப்படாதோரின் நிலைமை மிகுதியும் அபிவிருத்தியடைந்திருக்கிறது என்பதை நான் ஒத்துக் கொள்ளுகிறேன். இத்துறையில் முற்போக்கு இன்னும் விரைவாகச் செய்ய வேண்டுமென்ற ஆவல் மகாராஜாவுக்கும் அவரது சமஸ்தான உத்தியோகஸ்தர்களுக்கும்கூட உண்டாயிருக்கிறது என்பதையும் நான் காண்கிறேன். புலைய சகோதரர்களுக்கான ஓர் ஸ்தாபனத்தை நடத்துவதில் அரசகுடும்பத்தின் உறுப்பினர் ஒருவர் ஈடுபட்டிருப்பதைக்காண, எனக்குப் பெருமகிழ்ச்சி உண்டாயிற்று. ஆனால், இந்த முன்னேற்றத்தாலேயே திருப்தியடைவது என்னால் இயலாது. பல்லாண்டுக் கணக்கான இவ்வநியாயத்தை ஒழிக்க வேண்டுமென்பதில் நான் கொண்டிருக்கும் தீவிர ஆவலில் மகாராஜா அவர்களும் அவரது உத்தியோகஸ்தர்களும் பங்கெடுத்துக் கொள்ளவேண்டும் என்று நான் விரும்புகிறேன். தாம் இந்தச் சமஸ்தானத்தின் அதிபதி என்ற முறையில் மகாராஜா இந்தச்சமஸ்தானத்தின் முன்னேற்றத்தை ஒரு சிறிய அளவுக்கோலால் அளந்து, திருப்தியடைந்து விடலாம். ஆனால், மதத்தின் நற்பெயரைப் பாதுகாக்க வேண்டியவர் என்ற முறையில்,—அவர், ஒவ்வொரு இந்துவும், அதைப் பாதுகாக்க வேண்டியவர்—இப்பெரிய அநியாயத்தை, அவர் பொறுத்துக்கொண்டிருக்கக்கூடாது. இது இந்துமதத்தின் இதயத்தை அரித்து வருகின்றது."

திருவாங்கூரிற் போலவே, அதே பிரச்சினையைக் கொச்சியிலும் அவர் எதிர்க்க வேண்டியதாயிற்று என்பதைக் காட்டுவதற்காக, காந்தியடிகளின் எர்ணாகுளம் பிரசங்கத்தினின்றும், இதை எடுத்துக் குறிப்பிட்டேன். பகிரங்கப் பிரசங்கத்தில் மகாராஜாவுக்குச் செய்துகொண்ட வேண்டுகோளோடுகூட, மகாராஜாவின் மனைவியாருக்குத் தனிமையில் இன்னும் அதிக உருக்கமான வேண்டுகோளைக் காந்தியடிகள் செய்துகொண்டார். மகாராஜாவின் மனைவியார் அன்பு கூர்ந்து, காந்தியடிகளைத் தனியாகக் காணவந்தார். சமஸ்தானத்தாரும் ஜனங்களும் அவருக்கு அளித்த மிக உற்சாகமான வரவேற்பினாலும், அவர் தங்கியிருந்த காலம் முழுவதும் சமஸ்தானத்தார் அவருக்குச் செய்த உதாரமான உபசாரத்தாலும் இரண்டு வேண்டுகோள்களும் எழுச்சி கொண்டிருந்தன. நோயால் வருந்திக் கொண்டிருக்கும் மகாராஜாவின் நல்வரவு கூறும் செய்தியுடனும், கதரிடம் தாங்கள் கொண்டிருக்கும் அனுதாபத்தைக் காட்டும் அடையாளமாக சமஸ்தான பொக்கிஷத்தினின்றும் ௫௦௦ ரூபாயுடனும் சமஸ்தானத் திவான் காந்தியடிகளை வந்து கண்டார். இங்கிலாந்தில் படித்துக்கொண்டிருக்கும் தமது குமாரியின் நன்கொடையான ௫௦௦ ரூபாயையும் அவளது நூலையும் தமது சொந்த நூலையும் எடுத்துக் கொண்டு அவற்றையளிப்பதற்காக, மகாராணி வந்து சேர்ந்தார். அவருடன்கூட, அரசகுடும்பத்தைச் சேர்ந்தவரான இன்னொருவரும் வந்தார். அவர் வழக்கமாய்க் கதர் உடுத்துபவர்; அதோடுகூட, ஒழுங்காக நூற்பவர். இந்த சூழ்நிலைகளிருக்கும் கொச்சியில், கதர் மணங் கமழ்வதை நாங்கள் கண்டது ஆச்சரியமல்ல. பகலில் அநேகம் பெண்மணிகள் வந்தார்கள். அவர்களிற் சிலர் பள்ளிக்கூட உபாத்தியாயினிகள். ஒருவர் சமஸ்தான ஆஸ்பத்திரியில் பொறுப்புள்ள ஒரு பதவியை வகித்திருப்பவர். அவர் வழக்கமாய் நூல் நூற்பவர். ஏறக்குறைய அவர்கள் யாவருமே வழக்கமாய்க் கதர் உடுத்துபவர். மாணவர்கள்—அவர்கள் நூற்கக் கணக்காய் இருந்தார்கள்; அநேகப் பெண் பள்ளிக்கூடங்களில் ௭௦௦ மாணவிகளுக்குமேல் இருந்தனர்—[illegible] கதர் மணத்தால் [illegible] கொள்ளப்பட்டிருக்கிறார்கள். [illegible] ௫௦௦ ரூபாய்க்குமேல் அடங்கிய பணமுடிப்பை அளித்தார்கள்; தங்கள் [illegible] சொந்தச் [illegible] [illegible] ஓர் பொதுக் [illegible] [illegible] [illegible] பெண் மாணவி [illegible]

றை அளித்தார்கள். எனவே, பொதுப் பணமுடிப்புச் சிறிதேயாயினும், இளைஞரும் சிறுமிகளும் அதற்கு ஈடுசெய்துவிட்டார்கள். தீண்டாமைத் தீமையை ஒழிப்பதில் சமஸ்தானத்துடன் ஒத்துழைக்குமாறு, இந்த அறிவு விளக்கம் பெற்ற கூட்டத்தினருக்கு, காந்தியடிகள் செய்து கொண்ட வேண்டுகோளாவது:—"ஒரு மாலுமி (கொந்தளிப்பில்லாத) அமைதியான பொழுதில், சாவதானமாக, மிதமான வேகத்தில் கப்பலைச் செலுத்தி, சேரவேண்டிய நேரத்தில் கரையை அடையலாம் என்று கருதினால், அது நியாயமாகும். ஆனால், இந்துமதம் என்ற கப்பல், இந்நாள் கொடும்புயலில் பிரயாணம் செய்துகொண்டிருக்கிறது. உலகத்தின் பிறமதங்களைப் போலவே புரட்சிக்கு உட்பட்டிருக்கிறது. இந்தியாவின் கோடிக்கணக்கான இந்துக்களின்மீது உலகத்தார் தம் கண்களைச் செலுத்தியிருக்கிறார்கள். இந்தப் பிரச்சினையை இந்துக்கள் எப்படித் தீர்த்துக் கொள்ளுகிறார்கள் என்பதை அவர்கள் ஆவலுடன் நோக்கிக்கொண்டிருக்கிறார்கள். புயல் அடிக்கும் இவ்வேளையில், நாம் செய்திருக்கக்கூடிய சிறு முன்னேற்றத்தைக் கொண்டு திருப்தியடைதல் அசட்டுத்தனமாகும். நம்மீது வீசும் தருணத்திலிருக்கும் புயலை நாம் வெல்லவேண்டுமாயின், நாம் அதிகத் துணிவைக் கைக்கொண்டு, முழுவேகத்துடன் முன்னேக்கிப் பிரயாணம் செய்யவேண்டும். இன்னும் காத்துக் கொண்டு, இந்துமதத்தின் காவலர் என்று கருதப்படும் புரோகிதரைச் சூழ்ந்துகொண்டிருக்கும் தப்பெண்ணம், மூட நம்பிக்கை ஆகியவற்றின் உணர்ச்சிகளை, தங்கத் தராசில் நிறுத்துக் கொண்டிருத்தல் இயலாது. ஒவ்வொருவரும் உணர்ந்து கொண்ட தீமைக்கு முன்னே, மூட நம்பிக்கைகளும் தப்பெண்ணங்களும் ஓடிப்போகும்வரையில் காத்திருக்க இயலாது."

திருச்சூரில்கூட மாணவர்கள் ௫௦௦ ரூபாய்க்குமேல் அடங்கிய பண முடிப்பு ஒன்றை அளித்தார்கள். விவேகோதய ஆண், பெண் பள்ளிக்கூடங்கள் ஒரு பெருத்த நூற்றல் காட்சியை நடத்தின. ஆயிரங் குழந்தைகள் தங்கள் தக்ளிகளிலும் இராட்டைகளிலும் நூல் நூற்றார்கள். பையன்கள் இரண்டு லட்சம் கஜ நூலும், பெண்கள் ஒரு லட்சம் கஜ நூலும் காந்தியடிகளுக்கு அளித்தார்கள். அது நடந்த மட்டில் நல்லதே. ஆனால், முழுவேலையும் நடந்து வந்திருக்கும் முறை, பள்ளிக்கூடத்திற்கும் ஒரு மதிப்பைத் தரக்கூடியதல்ல; சில காலம் நூற்றலை எல்லாப்பள்ளிக்கூடங்களிலும் கட்டாயமாகச் செய்திருந்த அந்தச் சமஸ்தானத்திற்கும் ஒரு மதிப்பைத் தருவதல்ல. அதே பள்ளிக்கூடத்தைப் பார்க்கச் செல்லும் சந்தர்ப்பம் இரண்டரை ஆண்டுகளுக்குமுன் எங்களுக்குக் கிடைத்தது. அப்பொழுது அவர்கள் நடத்திய நூற்றல் காட்சியைவிட, இப்பொழுது நடத்திய காட்சி முன்னேற்றமடைந்திருக்கவில்லை. முதல் தடவை நாங்கள் சென்றபொழுது எப்படிக் கதரைக் காணவில்லையோ அப்படியே இப்பொழுதும் காணவில்லை. அநேகம் இடங்களிற்போலவே, அங்கேயும், (விஷயத்தின்) உட்பொருளை முழுவதும் கைவிட்டு, அதன் எழுத்தையே வணங்குகிறார்கள் என்று உணர்ச்சிகொள்ளாமலிருக்கமுடியவில்லை. ஆகையினால், உற்சாகம் கொண்டவர்கள் நூற்றலின் உட்கருத்தையும் அதன் கைத்திறனையும் அறியாமல், அதைப்பரப்ப முயலுவதன் ஆபத்தைக் குறித்து, திருச்சூர்ப்பிரசங்கத்தின் சிறந்த பாகம் கூறியது; ஒரு மதிப்பற்ற பொருளைத் தவறாய்க் கையாட வேண்டாமென்ற எச்சரிக்கையும் அதில் செய்யப்பட்டது. கதரைப்பற்றி இன்னும் அதிகச் சிரத்தையுடனும் கவனம் செலுத்துமாறும், அஹமதாபாதில் தொழிற்கலாசாலைகள் நடத்தி ஆராய்ச்சி செய்து வரும் சீமதி அனசூயா பாய் அவர்களின் சில முறைகளைக் கைக்கொள்ளுமாறும், சமஸ்தான அதிகாரிகளுக்கு அவர் யோசனை கூறினார். அவர் கூறியதாவது:—"நீங்கள் ஒரு மகத்தான பரீட்சையை நடத்திவருவதைக் கண்டு [illegible] [illegible] [illegible] [illegible] நான் உங்களுக்குக் கூறுகிறேன். நூற்றலில் [illegible] [illegible] [illegible] [illegible]

ளுக்கு இருக்குமாயின், கதரை உடுத்துமாறு பையன்களையும் பெண்களையும் நீங்கள் தூண்டுவது முற்றும் தேவையாகும். பையன்கள் கதரை உடுத்தாதிருத்தலை நீங்கள் அங்கீகரிக்கும் பொழுதே. பரீட்சையின்உண்மை மறைந்து போகிறது என்று நான் கூறுவதன் பொருளை உணருமாறு நான் உங்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன்."

ஆனால், நற்குணத்தை வளர்த்துக் கொள்ள, இதைப்போலவே அழுத்தமான புத்திமதியைப் பையன்களுக்கு சொல்லாது அவர் விடவில்லை. "மதக்கல்வியும் ஒழுக்கக் கல்வியும் நற்குணத்தை வளர்க்கவேதான். எனவே, பையன்களுக்கும் பெண்களுக்கும் நான் கூறுவதாவது:—கடவுளிடம், எனவே உங்களிடமும், ஒருபொழுதும் நம்பிக்கையை இழக்காதேயுங்கள்; ஒரே ஒரு தீய எண்ணத்திற்கு ஒரே ஒரு பாவ எண்ணத்திற்கு, இடங்தந்து விட்டீர்களானால், அந்நம்பிக்கைபோய்விடும். பொய், தர்மசிந்தனையின்மை, பலாத்காரம், காம இச்சை, ஆகிய இவையாவும் கடவுளிடம் நம்பிக்கையுடையோர்க்கு அந்நியமானவை. இவ்வுலகத்தில், நம்மைவிட நமக்குப் பெரிய எதிரிகள் எவருமில்லை என்பதை நினைவில்வையுங்கள். பகவத்கீதை, அநேகமாக ஒவ்வொரு சுலோகத்திலும் இதைக்கூறுகிறது. கிருஸ்துவின் மலைப்பிரசங்கத்தின் உபதேச சாரமும் இதுவேயாக நான் காண்கிறேன். கொரானை நான்படித்ததினின்றும் இதேமுடிவுக்கு நான் வந்திருக்கிறேன். நமக்கு நாமே எவ்வளவு தீங்கைச் செய்துகொள்ளக் கூடுமோ அவ்வளவைப் பிறர் எவரும் நமக்குச் செய்யமுடியாது. ஆகையினால், நீங்கள் தைரியமுள்ள பையன்களும் தைரியமுள்ள பெண்களுமாக விரும்பீர்களாயின், இவ்வெண்ணக் கூட்டங்கள் யாவற்றுடனும் மூர்த்தன்னியமாயும் தீரமாயும் நீங்கள் போராடவேண்டும். ஒரு பாவ எண்ணத்தின் தூண்டுதலின்றி, எந்தப்பாவச் செயலும் இவ்வுலகில் ஒருபொழுதும் செய்யப்படுவதில்லை. உங்கள் இதயத்தில் ஊறும் ஒவ்வொரு எண்ணத்தின்மீதும் கடுமையான எச்சரிக்கையை நீங்கள் கைக்கொள்ளவேண்டும். அநேக மாணவர்கள், இளைஞரும் சிறுமிகளும் ஆகிய இருபாலாரும், தாங்கள் தங்களது அறிவைக்கொண்டு எனது சொற்களின் வன்மையைத் தெளிந்து கொண்டாலும், தங்கள் கருத்தை அடக்கியாளத் தங்களால் இயலவில்லையே என்று என்னிடம் அநேகதடவை கூறியுள்ளார்கள். இவ்வாறு அவர்கள் தங்கள் போராட்டத்தைக் கைவிட்டு, வக்கத்திற்கு இடமளித்து, அதன்மேல் தங்களைத் தூண்டுவதற்கான விலக்கிய புத்தகங்களை அடைந்து, தீய எண்ணங்களை வளர்க்கிறார்கள். நமக்குள் நிகழும் இருமுறைகளின் வேற்றுமைகளைக் கூர்மையாய் வகுத்துக்கூற விரும்புகிறேன். பக்குவமடைந்தவர்களைத் தவிர்க்க பிறர் ஒவ்வொருவரது உள்ளத்திலும் தீய எண்ணங்கள் எழும். எனவே, நம்மைக் கெட்ட எண்ணங்களினின்றும் காக்குமாறு கடவுளை நாம் விடாமல் பிரார்த்தித்துக்கொண்டிருக்கவேண்டியது அவசியமாகும். இந்த முறை நமக்கு நன்மையைச் செய்வதாகும். கெட்ட எண்ணங்களைக்கருதி, அவற்றில் களிப்படைவது மற்றமுறை. இந்தமுறை மிகுந்த ஆபத்தையும் தீங்கையும் விளைவிப்பதாகும். உங்கள் முழுவன்மையுடனும் போராடுமாறு, நான் அழைப்பது இந்த முறையையே. இது மிக எளிதாகச் செய்யக்கூடியது. நமது உள்ளத்தில் இடந்தர அல்லது துணிவளிக்கத்தக்க விருந்தினர் (கருத்துக்கள்) யாவரென நாம் ஒவ்வொருவரும் தேர்ந்து கொள்ளமுடியும். எதிரி தாக்குவதை நாம் தவிர்க்கமுடியாமலிருக்கலாம். ஆனால், எதிரிதாக்குவதை எதிர்க்கும்முயற்சியில் நம் உயிரையும் விட்டுவிடுவது நம் கையிலிருக்கிறது. இது ஒரு மருந்து. மற்றொரு மருந்து, பசியால் வாடும் கோடிக்கணக்கானவர்க்காக நூல் நூற்பதற்காகத் தினம்தோறும் அரைமணி நேரத்தைச் செலவழிப்பதாகும். இந்தியாவின் கோடிக்கணக்கானவர்க்காக உழைக்கிறோம் என்ற இந்த ஒரே எண்ணம் என்னையும் என் தோழர் யாவரையும் எல்லாத் தீங்குகளினின்றும் எப்படிக் காத்துவருகின்

றது என்பதை எனது சொந்த அனுபவத்தினின்றும், எனது தோழர் அநேகரது அனுபவத்தினின்றும், உங்களுக்கு நான் கூறுகிறேன். இராட்டையின் சூட்சமப் பொருள் இதுவேயாகும்."

பாலக்காடு.

மலையாளத்தில் பாலக்காடும் புயல் நிகழ்ச்சிக்கு ஒரு இடமாகும். தீண்டாமைபற்றி, அங்கே அநேகம் சண்டைகள் நடந்திருக்கின்றன. இன்னும் போராட்டம் நடந்துகொண்டிருக்கிறது. அதனால், தீண்டப்படாதோருக்குத் தற்காலிகமாக வசதிக்குறைவு ஏற்பட்டிருக்கிறது. இங்கே, ஓர் நாயாடியை நேருக்குநேர் சந்திக்கும் சந்தர்ப்பம் எங்களுக்குக் கிடைத்தது. என்றாலும், அவனுடன் நாங்கள் கைகுலுக்கமுடியவில்லை. திருவனந்தபுரத்தில் குஷ்டரோகிகள் பாதுகாப்புச் சாலையைக் காந்தியடிகள் பார்க்கச்சென்ற பொழுது, அவர்களது புண்களைப் பரீட்சிக்க, குஷ்டரோகிகளை அன்புடன் தமது கையால் தொட்டார். ஆனால், ஜனசமூகம் குஷ்டரோகிக்கும் கீழ்ப்பட்டவராகச் செய்துள்ள இந்த நாயாடியோ, எங்கள் சமீபமாக, சில கஜ தூரத்துக்குள் வரமுடியவில்லை; எங்களுக்கு இடையே ஓர் வேலியிருந்தது. நல்ல உடலமைப்புக் கொண்டவனும், மழுங்க க்ஷவரம் செய்துகொண்டவனுமான இந்த வாலிபன், தனது குரலுச்சியில் பிச்சைகேட்டுக் கூவிக்கொண்டிருந்தான். இந்த விநோதமான சத்தத்தை, திரு. ராஜகோபாலாச்சாரியார் காந்தியடிகளின் கவனத்துக்குக் கொண்டுவந்தார். அந்த ஊரைச் சேர்ந்தவர்களுக்கு அதில் ஒன்றும் விநோதமில்லை. "எல்லா நாயாடிகளையும் போலவே, ஒவ்வொரு சனிக்கிழமையும் வந்து, அரிசி வேண்டுமென்று கத்துகிறான்" என்று எங்களிடம் கூறினார்கள். மன இரக்கமுடையவர் யாராவது, ஒரு பிடி அரிசியை எடுத்துச்சென்று, வேலிக்கு அப்பால் நாயாடி விரித்திருக்கும் துணியில் எறிவார்கள். அப்பொழுதெல்லாம் நாயாடி துணிக்கும் சில கஜங்கள் எட்ட நின்று கொண்டிருப்பான். கண்ணியமாக ஜீவனம் செய்ய, உழைக்கமுடியுமா வென்று இந்த நாயாடி இளைஞனைக் காந்தியடிகள் கேட்டார். சமூகத்தில், சந்தோஷமாக இருப்பவர்களுள் ஒருவனாக அவன்காணப்பட்டான். புலத்தில் வேலை செய்வதால், அவன் நாளொன்றுக்கு நாலணாவும் அவனது மனைவி நாளொன்றுக்கு மூன்றணாவும் சம்பாதித்துவருகிறார்கள். "அப்படியானால், ஏன் நீ பிச்சை கேட்கிறாய்" என்று காந்தியடிகள் வினவினார். "ஏனென்றால், அது வழக்கம்; எங்களிடம் உள்ள அற்பக் கையிருப்பில் இதையும் சேர்த்துக் கொள்ளுகிறோம்" என்று அவன் கூறினான். "ஆனால், நாங்கள் உனக்கு நல்ல வேலை தேடிக் கொடுத்து, மாதச் சம்பளமாகக் கொடுத்தால், பிச்சையெடுத்தலைவிட்டு விட மாட்டாயா" என்று காந்தியடிகள் கேட்டார். "விட்டு விடுவேன்" என்று சிறிது தயக்கத்துடன் அவன் கூறினான். "நீ நாளைக்கு வருகிறாயா" என்று காந்தியடிகள் வினவினார். "எனது ஜனங்களைக் கேட்க வேண்டும். நான் வந்தாலுங்கூட, நாளைக்கு நான் வரமுடியாது. ஆனால், அடுத்த சனிக்கிழமைதான் நான் வரலாம்." இவ்வாறு அவன் எங்களைத் தட்டிக்கழித்துவிட்டான். நாங்கள் நின்றுகொண்டிருந்த சாலையில் அவன் தனது வாழ்நாளில் ஒருபொழுதும் நடந்ததில்லை. வந்தால் அடிப்பார்களென அவன்வர மறுத்துவிட்டான். இன்னும் விசேஷம் யாதெனில், தனது நிலைமையிலே திருப்தி கொண்டவனாகவும் அவன் காணப்பட்டான். இந்துமதத்தின் பாதுகாவலர்கள் தங்கள் சொந்தமனச்சாட்சிகளைக் கொன்று, இந்தப் பரிதபிக்கத்தக்க ஜனங்களுக்குச் சிலபிடிகள் அரிசியை எறிந்து, மனித சமூகத்தின் ஒருபகுதியினரைத்தாழ்த்தித் தங்களையும் தாழ்த்திக் கொள்ளுவது இவ்வாறுதான்.

ஈழுவர்களுடையவும் சேருமர்களுடையவும்—"தீண்டப்படாதோர்" ருங் கூடப்பிரிக்கப்பட்டிருக்கும் பற்பல ஜாதிகளுள் இவை இரண்டு—பிரதிநிதிக் கூட்டம் ஒன்று, பிற்பகலில் காந்தியடிகளைக்காண வந்தது. அவர்கள் நம்மில் மிகச்சிறந்தவர்களைப் போலவே அவ்வளவு சுத்தமாகவும் அவ்வளவு படித்தவர்களாகவுமிருந்தார்கள். அநேக உரிமைக் குறைவுகளைக் குறித்து, அவர்கள் புகார் கூறினார்கள். அவர்கள் சில ரங்

(௬-ம் பக்கம் பார்க்க)

## கதர் நிதி.

### தமிழ்நாட்டு வசூல்.

திரு. ஸி. ராஜகோபாலாச்சாரியார் அவர்கள் நமக்கு அனுப்பியுள்ள தமிழ்நாட்டு, கதர்நிதி வசூல் விபரம் வருமாறு:—

**செட்டிமார் நாடு.**

| | |
|---|---|
| காரைக்குடி | கூருஉச கூ எ |
| தேவகோட்டை | சஉகஅ கங சு |
| பாகனேரி | சகஉ௦ க௦ ங |
| கோட்டையூர் | உருஙஉ ௦ ௦ |
| கானாடுகாத்தான் | உசககூ கூ கூ |
| கடியாப்பட்டி | கஉகூஎ கக கூ |
| அமராவதி புதூர் | ககஅகூ கூ க |
| சிராவயல் | க௦கூகூ கக கூ |
| கொத்தமங்கலம் | எ௦க ச ௦ |
| பள்ளத்தூர் | கூ௦க ௦ ௦ |
| நாச்சியார்புரம் | ரு௦ரு ௦ ௦ |
| நேமத்தான்பட்டி | ரு௦க ௦ ௦ |
| கூழிபிறை | ச௦க ௦ ௦ |
| நச்சாந்துப்பட்டி | ங௦க ௦ ௦ |
| லட்சுமிபுரம் | உரு௦ ௦ ௦ |
| விராச்சிலை | கஉக ௦ ௦ |
| பனையப்பட்டி | க௦க ௦ ௦ |
| ஜயங்கொண்டபுரம் | க௦க ௦ ௦ |
| மணச்சை | க௦௦ ௦ ௦ |
| மானகரி | கங ௦ ௦ |
| ஆக மொத்தம் ரூ. | உஎ,௦கூஉ கஉ ௦ |

| | |
|---|---|
| சென்னை நகரம் | உக,எஎஉ கூ ச |

**மதுரை.**

| | |
|---|---|
| மதுரை | கஙசஎஉ எ கூ |
| திருமங்கலம் | எஅஉ கங அ |
| தேவாரமும் கூடலூரும் | கசங ௦ எ |
| கோம்பை | க௦௦ ௦ ௦ |
| ஆக மொத்தம் ரூ. | கச,சகூஅ ரு கூ |

**கோயமுத்தூர்,**

| | |
|---|---|
| கோயமுத்தூர் | சஎஉ௦ கரு கூ |
| திருப்பூர் | ஙககஎ உ கூ |
| பொள்ளாச்சி | உஉ௦ச ங கூ |
| கோபிசெட்டிபாளையம் | கஉஙக கரு கக |
| ஏரசனம்பட்டி | உஎ௦ ௦ ௦ |
| வெள்ளக்கோயில் | க௦௦ ௦ ௦ |
| கிணத்துக்கடவு | க௦௦ ௦ ௦ |
| அவனாசி | ஙச கக கூ |
| சேயூர் | கங ச ௦ |
| ஆக மொத்தம் ரூ. | கக,அ௦உ ரு ரு |

**திருச்சினாப்பள்ளி.**

| | |
|---|---|
| திருச்சினாப்பள்ளி | அஙஉ கஉ கக |
| ஸ்ரீ ரங்கம் | ககங கூ உ |
| லால்குடி | ககூருஎ கங ங |
| கரூர் | அகூகூ க௦ ங |
| மனச்சநல்லூர் | கருக ௦ ௦ |
| ஆக மொத்தம் ரூ. | கக,உருக கங எ |

**தஞ்சாவூர்.**

| | |
|---|---|
| மாயவரம் | ஙஉஅஉ ங உ |
| மன்னார்குடி | ங௦ச௦ கச கக |
| கும்பகோணம் | உகூஉங க௦ கக |
| தஞ்சாவூர் | க௦சக எ க௦ |
| ராஜப்பன்சாவடி | உஅஅ கஉ ௦ |
| வல்லங்கிமான் | உ௦க ௦ ௦ |
| நீடாமங்கலம் | க௦ச ௦ ௦ |
| திருவிடைமருதூர் | எகூ கஉ ௦ |
| பாபநாசம் | உங ௦ ௦ |
| மோருபட்டி | கரு ௦ ௦ |
| சில்லறையாக | ரு ௦ ௦ |
| ஆக மொத்தம் ரூ. | கக,௦௦ச கஉ க௦ |

**திருநெல்வேலி.**

| | |
|---|---|
| திருநெல்வேலி | ஙககூரு கூ ௦ |
| சாத்தாக்குடி | உகூககூ ரு ச |
| கோயில்பட்டி | கசககூ கக க |
| ஸ்ரீவைகுண்டம் | க௦ககூ ச ௦ |
| நாங்குனேரி | கூருச க கூ |
| பனகுடி, திசையன்விளை செல்வமருதூர் முதலான இடங்கள் | சஙச கங கூ |
| சிவகிரி | ருங௦ கூ ரு |
| சங்கரன் கோயில் | உஉஎ கச ௦ |
| கல்லிடைக்குறிச்சி | கசஉ கூ கக |
| சிவகாசி | எகூ அ ௦ |
| தென் திருப்பேறை | ருக ௦ ௦ |
| கழுகுமலை | ருக ௦ ௦ |
| கரியலூர் | ஙச அ ௦ |
| முதுகுமிக்தம் | ஙக ௦ ௦ |
| சங்கரன் கோயில் | ககூ ௦ ௦ |
| ஆக மொத்தம் ரூ. | க௦,சகூஎ எ கூ |

**பிரிட்டிஷ் மலையாளம்.**

| | |
|---|---|
| கள்ளிக்கோட்டை | சககங கூ ச |
| பாலக்காடு | உஉஙகூ உ எ |
| ஒட்டப்பாளையமும் சோரனூரும் | கஉ௦ரு கரு ௦ |
| அகதி தீரம் | ஙகச க கூ |
| தலைபாம்பா | க௦க ௦ ௦ |
| பொன்னானி | கூகூ கரு ௦ |
| பாதகரா | ருசஉ ரு கூ |
| சில்லறையாக | கக ௦ ௦ |
| ஆக மொத்தம் ரூ. | அருகூச க உ |

**ராமநாதபுரம்**

| | |
|---|---|
| ராஜபாளையம் | ஙகூசஉ ௦ ௦ |
| விருதுநகர் | கஅஙஉ கச கூ |
| பரமக்குடி | ககஎகூ எ அ |
| சாத்தூர் | ருககூ கூ ங |
| திருப்பத்தூர் | சஙக கரு கூ |
| ஸ்ரீவில்லிபுத்தூர் | கூகூ அ கூ |
| ஆகமொத்தம் ரூ. | எ,கூகூகூ எ ரு |

**வடஆற்காடு**

| | |
|---|---|
| வேலூர் | உகூஉகூ கக கக |
| ஆரணி | உகஎஅ க௦ ரு |
| குடியாத்தம் | கஙகஉ ச உ |
| ஆற்காடு | கூஉகூ கரு ங |
| பள்ளிகொண்டான் | எகூ உ கூ |
| திருவண்ணாமலை | ரு௦ ௦ ௦ |
| ஆகமொத்தம் ரூ. | கூஅஎ௦ கஉ ங |

**திருவாங்கூர்**

| | |
|---|---|
| திருவத்தூர் | உஙஅகூ ச கூ |
| நாகர்கோயில் | கஉருங உ க |
| ஆலப்பிழை | கூஎச கூ ௦ |
| கொல்லம் | அருஅ உ கூ |
| ஹரிபாத் | ஙஙரு ௦ ௦ |
| கருவாட்டா | ஙகங ௦ ங |
| கார்த்திகபள்ளி | உஙரு ரு ங |
| காயன்குளம் | க௦ரு ௦ ௦ |
| சோல்கன்னூர் | ககக ௦ ௦ |
| கருநாகபள்ளி, ஒச்சார, ஆயகாரம்பூர், தோட்டபள்ளி | அ௦ உ ங |
| ஆகமொத்தம் ரூ. | கூகூருச க௦ ச |

**கோச்சி**

| | |
|---|---|
| எர்ணாகுளம் | உருகா ௦ க |
| திருச்சூர் | கஅகூஅ கக ரு |
| கொச்சி | கூ௦௦ ௦ ௦ |
| எல்லூர் | அஅரு கங ௦ |
| திருப்பன்துரை | உஎஉ ரு கூ |
| மாச்சாத் | கங அ ௦ |
| ஆகமொத்தம் ரூ. | கூசஅகூ கூ ௦ |

**தென்னாற்காடு**

| | |
|---|---|
| கடலூர் | ங௦அஎ கஉ எ |
| சிதம்பரம் | ககூகூரு எ கூ |
| திண்டிவனம் | உகூ௦ ௦ ௦ |
| ஆகமொத்தம் ரூ. | ருஙகங ச க |

**செங்கல்பட்டு**

| | |
|---|---|
| காஞ்சீபுரம் | கசக௦ கங கூ |
| ஆதம்பாக்கம் | கஉககூ கூ ங |

## பெண்ணுரிமை

(மு. கி. பாடியன)

இக் கொடும்பழ வழக்கினை எதிர்த்தழித் தோராம்
அக்பர் மன்னனும் வாரனேஸ் டிங்லெனும் அவனும்
தக்க சீர்பெறும் இராசாசம் மோகனர் தாமும்
மக்களால் நனிவணங்குதற் குரியவர் மாதோ.

செந்சொன் மாதர்தம் உரிமைகொல் பாவமும் செருக்கிப்
பஞ்சமக்குலம் ஒடுக்கிய பாவமும் திரண்டு
நஞ்சு சேர்ந்திடும் ஆங்கிலாகிரம் நாட்டில்
அஞ்சு மாறெமைக் கொடுமையின் ஆள்குறும் அம்மா.

கைம்மை மாதர்தம் தொகைபுணர் கலைவலான் ஒருவன்
வன்மைபுற்றிடு ஜர்மனிவாழ்நகர் தொகையில்
செம்மையாம் அரைத் தொகையினர் மங்கையர் திருநால்
இன்மை யாற்றுபர் உறுவரிந் நாட்டினி லென்றான்.

ஆயிரம் பதினுபிர மென்றது கினையீர்
மேய்மூன்றரைக் கோடியெண்ணு மதுவிளம்பில்
ஆய எண்ணுடைக் கைம்மையர் நாட்டினுள் அழுதால்
தேயம் நன்மையைச் சேருமென் பதுவெறும் திரிபே.

ஆண்டு மூன்றுடைக்கைம்மையர் ஆயிரத்ததிகர்
ஈண்டு பூப்புறு மங்கையர் தொகை பல இலக்கம்
ஊண்டு றந்துநல் உறக்கமும் துறந்துள முடைந்து
பூண்டு றந்திடும் இணையவர் துயரொகாட் போமோ.

அரச புத்திரர் எனுமொரு குலத்தினர் அகட்டுள்
கருவி ருக்கையில் அதற்குமே கடிமணம் புரிவார்
புரிகொள் நூலுறும் மார்பினர் புன்செயல் கண்டு
பெரிய செந்தமிழ் மக்களும் கன்னி கைப்பிடிப்பார்.

கருஉயிர்க்குமுன் மணமெனுன் காண்குவர் என்றிங்
கொருவிர் தாமுநீர் ஐபுநீர் உயிர்ப்பது பெண்ணேல்
தருவம் யாமெனப் பலர்முனர் மெய்யுரை சாற்றி
இருகு லத்தரும் வெள்ளிலை மாற்றுவர் இனிதே.

## கதர்நிதி.

### தமிழ்நாட்டு வசூல்.

| | |
|---|---|
| திருவள்ளூர் | எரு௦ கஉ ௦ |
| பூனமல்லி | ஙகக ங ச |
| ஸ்ரீ பெரும்புதூர் | ருகஎ ௦ |
| ஆகமொத்தம் ரூ. | ஙஅஙக ரு ங |

**சேலம்**

| | |
|---|---|
| கிருஷ்ணகிரி | உஉ௦க க எ |
| ஒசூர், சூலகிரி | எ௦ரு க௦ ௦ |
| புதுப்பாளையம் | உ௦ரு க ௦ |
| ஆகமொத்தம் ரூ. | ஙககஉ க எ |

**புதுக்கோட்டை**

| | |
|---|---|
| மொத்தம் ரூ. | கஎருக கக ௦ |
| சில்லறையாக | உகக ௦ ௦ |
| தமிழ்நாட்டிலும், கேரளத்திலும் மொத்தத்தொகை | கருசஅருக கங ௦ |

**கர்நாடகம்:—**

| | |
|---|---|
| தென்கன்னடமும் சில்லறையும் ரூ. | ருகூசச க ரு |
| குஜராத் வெள்ள கஷ்டநிவாரணத் திற்காகவாவு ரூ. | கங௦ ௦ ௦ |
| மொத்தம் வரவு | க,கூஙகூஉக ங ரு |
| பாக்கிச் செலவு | உ௦ கங அ |
| நிகரம் ரூ. | க,கூங,க௦ரு ரு க |

**இதற்கு விபரம்:—**

| | |
|---|---|
| மைலாப்பூர் அர்பன்பாங்கில் | க,௦ச,எஎஎ கங க |
| திருப்பூர் காதி வஸ்திராலயத்தில் | ருஅக௦ ரு ௦ |
| அகிலபாரத சர்க்கா சங்கம் (ஈரோடு) | ஙஙகஎ ங ௦ |
| ஆகமொத்தம் ரூ. | க,கூங,க௦ரு ரு க |

## பாகனேரி வசூல் விபரம்.

ஒரு நிருபர் பாகனேரி, கதர்நிதி வசூலின் பின்வரும் விபரத்தை அனுப்பியுள்ளார்:—

| | |
|---|---|
| பெரி அழ சு முத்துக்கருப்பன் செட்டியார் | க௦௦ |
| மு ள் மு சொக்கலிங்கம் செட்டியார் | ச௦௦ |
| ராம அ அ சிவ சிவராமன் செட்டியார் | ஙரு௦ |
| வெ பெரி பழகாசி வில்வநாதன் செட்டியார் | ங௦௦ |
| குப அரு (பொதுவில்) | உ௦௦ |
| குப ராம (பொதுவில்) | உ௦௦ |
| ராம பழ லெ இலக்குமணன் செட்டியார் | உ௦௦ |
| கா சுப சு கதிரேசன்செட்டியார் | உ௦௦ |
| மு ள முத்து முத்துராமன் செட்டியார் | கரு௦ |
| ராம பழ நா நாராயணன் செட்டியார் | கரு௦ |
| சிறுவயல் அரு சுப சுப்பிரமணியன் செட்டியார் | க௦௦ |
| வெ வெ சுரு கொக்கலிங்கம் செட்டியார் | க௦௦ |
| பெரி அழ தெ தெய்வாயன் செட்டியார் | க௦௦ |
| சி வ சி (பொதுவில்) | க௦௦ |
| கா அண அண்ணாமலைசெட்டியார் | எரு |
| தெ சுரு . அ அண்ணாமலை செட்டியார் | ரு௦ |
| நா நா ஆவி ஆவிச்சி செட்டியார் | ரு௦ |
| ஆவி நா அ கண. நாச்சியப்ப செட்டியார் | ரு௦ |
| நா க தெ தேனப்ப செட்டியார் | ச௦ |
| நா பழ நா நாராயணன்செட்டியார் | ச௦ |
| ஆ சுப ராம இராமநாதன் செட்டியார் | ச௦ |
| அ வ வள்ளியப்ப செட்டியார் | உ௦ |

(உ-ம் பக்கத் தொடர்ச்சி)

தாக்கிலே உபயோகிக்க முடியாது. தம் களித் பலர் இன்னாத்திறும் கிருஸ்தவமதத் திறும் சேர்ந்து வருவதாக, அவர்கள் கூறி ஞர்கள். "இந்த நிலைமைபற்றி நாம் எப்படி நடந்து கொள்ளுவது? அவர்கள் இத் தமதத்திலேயே இருக்க வேண்டுமா, அல்லது இருக்க வேண்டாமா" என்று அவர்களில் ஒருவர் கேட்டார். காந்தியடிகள் கூறியதாவது:—"நல்லது. உங்கள் உரிமைகளுக்காகப் போராடுவது என்பது ஒரு விஷயம்; நீங்கள் தோற்கடிக்கப் பட்டால், இந்த மதத்தை விட்டுச் செல்வது என்பது வேறு விஷயம். இந்த மதத்தில், சில அநுபவ நீங்கள் காண வேண்டும்; அல்லது காணுறிருக்க வேண்டும். நீங்கள் கண்டால், அதைக் கைவிடுவது என்ற கேள்வி இல்லை. பிறுபலத்தை அடிப்படையாகக் கொண்ட அரசாங்கங்களில் நம்பிக்கை வைத்து, தங்கள் வாழ்க்கையின் ஒவ்வொரு நாளும் கிருஸ்துவை மறுதளித்துவரும் ஏராளமான கிருஸ்தவர்களைக் கொண்ட கிருஸ்தவமதம் கிருஸ்தவமதமன்று. ஆனுல், பலாத்காரத்தை ஒழிக்கப் போராடும் கிருஸ்தவர்கள் கிருஸ்தவ மதத்தைவிட்டுச் செல்லவில்லை. அவ்விதமே, தீண்டாமையும், உயர்வு தாழ்வுகளுந்தம் இந்துமதத்திற் குரியனவன்று; நீங்கள் இந்தக்கஷ்டங்களிலிருந்து, இவ்விரண்டு நிலைகளையும் ஒழிக்கப் பன்மடங்கு வலிமையுடனும் போராட வேண்டும். நாங்கள் வெற்றி பெருவிடின், இத்தமதத்தை விட்டுவிடுவோம் என்று நீங்கள் கூறவீர்களாயின், இந்தமதம் உங்களுக்கு எவ்விதமதிப்பும் உடையதாகாது."

"ஓரளவு காலத்துக்குள் இந்துமதம் தூய்மை பெற்றுவிடும் என்று நீங்கள் நம்புகிறீர்களா" என்று ஒருவர் கேட்டார்.

"நம்புகிறேன். அதே நம்பிக்கைதான் எனக்கு யான் என்னைப் பக்குவப்படுத்தி வருகிறது."

"விஷயங்கள் இப்பொழுதிருக்கிற நிலைமையில், சத்யாக்கிரகம் செய்ய நாங்கள் தகுதியுற்றவர்களல்ல; சத்தியாக்கிரகத்தைத் தங்களுக்கு எதிராய்ச் செய்ய கைநீகளும் பாத்திரமுடையவர்களல்ல."

"அன்று. நிலைமையின் இரண்ட சாரத்தின் மீதே சத்யாக்கிரகம் செய்யக்கூடும்; எங்கே பலாத்காரம் மட்டிலுமே பரிகாரமாகக் காணப்படுகிறதோ, அங்கேதான் சத்யாக்கிரகத்தைச் செய்ய வேண்டும். ஏனெனில்,அது பலாத்காரத்திற்குப் பதிலியாகும்."

என்றுலும், இந்த வைதிகப்பாலைவனத்திலே, ஒரு பசுந்தரைத்திட்டு இருக்கிறது. பாலக்காட்டுக்குச் சில மைல் தூரத்தில், சபரி ஆச்சிரமம் என்ற ஒரு ஆச்சிரமத்தை திரு. டி. ஆர். கிருஷ்ணசாமி ஐயர் நடத்திவருகிருர். அங்கே பிராம்மணப் பையன்களுடனும் நாயர்ப்பையன்களுடனும் கூட,அவர் அரை டஜன் "தீண்டப்படாப்" பையன்களையும் வைத்துக் கொண்டிருக்கிருர். நாயாடிகளையும் கூட இழுக்கத் தாம் முயன்றதாகவும், ஆனுல் முடியவில்லையென்றும் அவர் கூறினர். பிரதேச ஆதரவு மிகுதியும் இல்லாவிட்டாலும், ஆச்சிரமத்தை முன்னுக்குக் கொண்டு வர, திரு. கிருஷ்ணஸ்வாமி ஐயர் தீரமான முயற்சி செய்துகொண்டிருக்கிருர்.

### கோயமுத்தூர்.

கோயமுத்தூரில் மறுபடியும் தமிழ் நாட்டுக்கு இப்பொழுது வருகிறோம். எதிர்ப்பின் உச்சியை இங்கே சந்தித்தோம். டாக்டர் வெஸண்ட் தமது இரண்டு உழைப்பாளருடன் கூட பந்தோபஸ்தில் வைக்கப்பட்டதும், சத்தியாக்கிரகத்தையே பலன் தரக்கூடிய ஆயுதமாக உபயோகிக்கத்தக்கதென்று இந்திய ஜனங்களுக்குக் கூறுமாறு காந்தியடிகளுக்குத் தூண்டுதல் அளிக்கப் போதிய கிளர்ச்சி நிகழ்ந்ததும் இவ்விடமே என்பது நினைவில் வைக்கப்படும். ஆனுல், பதினேரு ஆண்டுகளுக்கு முன்னர், பிராமணரல்லாதார் முதல் மகாநாடு நடத்த இடமும், இதவே.இப்பொழுது, இதுபிராமணரல்லாதாரின் கோட்டையாக இருந்துவருகிறது. எங்களை விருந்தினராக ஏற்று உபசரித்த திரு. ஷண்முகம் செட்டியார், பிராமணரல்லாதார் கொள்கையை விளக்கும் முக்கியஸ்தரில் ஒருவராகர்.

இந்த நிலைமையைக் கொண்ட விடத்தில், நகர சபையின வரவேற்புப் பத்திரம்கூட, வர்ணச்சிரதர்மத்தைக் குறித்துக் காந்தியடிகள் கொண்டுள்ள அபிப்பிராயங்களைப்பற்றிக் குணங் குறைகளைக் கூறப்பயன்படுத்திக் கொள்ளப் பெற்றது என்பதில் ஆச்சரியமில்லை. இத்தகைய அபிப்பிராயங்களைப் பற்றிக் கூற, நகரசபை தகுந்ததேயல்ல. பள்ளிக்கூடங்களையும் பொது ஜன சேவையான உத்தியோகங்களையும் பகிஷ்கரிப்பதால் தோல்வி உண்டாகுமென்று தாங்கள் தீர்க்கதரிசனம் கூறியதை, நகரசபையார் "நாங்கள்சொல்லவில்லையா" என்ற கருத்தில், காந்தியடிகளுக்கு ஞாபகமூட்டினுர்கள்; வர்ணச்சிரம தர்மத்தைக் குறித்து, அவரது அபிப்பிராயங்களும் அதேவிதமான தவறைக் கொண்டன என்று, அவர்கள் அவரிடம் கூறினுர்கள். இவ்விதம் குறிப்பிட்டுக் கூறியது பொருத்தமற்றது என்பது வெள்ளிடையாகும். ஆனுல், காந்தியடிகள், அவரது வழக்கம் போலவே, இந்தக் குணங் குறை உரையை மரியாதையானதாகவே ஏற்று, இதற்கு ஒரு விரிவான பதிலை அளித்தார், அதை எல்லா இந்துக்களும் திருப்பித்திரும்பப்படித்து, தேவையான ஒரேவொரு விஷயமான தீண்டாமை விலக்கில் தங்கள் செயல்திறனையெல்லாம் குவிக்க வேண்டும். நாம் விழித்துக் கொள்ளாவிட்டால், சுவாமி சிரத்தானந்தரின் மேன்மையான தியாகம் வீணுய்ப் போகும்.

### ஒரு மாணவர்.

புத்தி சாதுர்யத்துடனும் பக்குவ அறிவுடனும் நடந்துகொள்ளும் மனிதர்கள் இங்கு இருக்கிருர்கள். அவர்கள் தங்கள் அமைதியான போக்கில் உழைத்துக்கொண்டிருக்கிருர்கள். ஒற்றுழையாமைக் காலத்தில் தமது தொழிலைவிட்ட திரு. பாலாஜி ராவ் திரும்பவும் தொழிலுக்கு ஒரு பொழுதுஞ்செல்லாமல். கிராமம், கதர்ஆகியவற்றின் பொருளாதாரத்தைக் குறித்து ஆராய்வதில் தமது காலத்தைச் செலவழித்து வருகிருர். ஒவ்வொரு சமயம் அவர் அனுப்பியுள்ள குறிப்புக்கள் "இளமை இந்தியா"வின் வாசகர்க்கு நினைவிலிருக்கும். அவர் சேகரித்துள்ள கோர்த்தியான புத்தகங்களைக் காந்தியடிகளுக்கு அளிப்பதற்காக, அவர் வந்தார். காந்தியடிகள் கூறியதாவது:—"இந்தப் புத்தகங்களை அளித்ததற்கு, நான் நன்றியுடையனுயிருக்கிறேன். கதரில் எதத்கைய ஞானத்தையும் தெளிவையும் தாங்கள் காட்டவேண்டுமென்று எனக்கு விருப்பமோ அத்தகைய தெளிவும் ஞானமும் உங்கள் ஆராய்ச்சியின்மீது நீங்கள் செலுத்துவதாக, நீங்கள் எடுத்துள்ள குறிப்புகள் காண்பிக்கவில்லை யென்று நினைக்கிறேன்." அவர் "நான் செலுத்தவில்லை. நான் இதை ஒரு பொழுதுபோக்காகவே செய்பவன்" என்றுர். காந்தியடிகள் கூறியதாவது:—"நல்லது, நல்லது. கிளாட்ஸ்டன் பொழுது போக்காகவே விறகுவெட்டி வேலை செய்துவந்தார். ஆனுல், எந்த மரத்தைப் பிளப்பது என்பதும் கோடரியை எந்த விடத்தில் போடுவது என்பதும் அவருக்குத் தெரியும். பிராட்லாப் பொழுது போக்காகவே வக்கீல் தொழில் செய்தார். ஆனுல், சட்டத்தில் சுய அறிவு என்ற அரிய புத்தகத்தை அவர் எழுதினுர். வக்கீல் எவரும் அதை எழுதியிருக்க முடியாதது. கடற்கரையில் பிரசங்கம் செய்யக்கூடாதென, அவருக்கு ஒரு உத்திரவு கிடைத்தது. அப்பொழுது, அவர் படகில் ஏறிக்கொண்டு, கடற்கரையில் இருந்த மனிதர்களுக்குப் பிரசங்கம் புரிந்தார். சட்டத்தை அவருக்கு எதிராய்ச் செலுத்தியவர்கள் அது வீணுனதைக் கண்டு வியந்தார்கள். நமது நாட்டில் கோகலே, பொழுது போக்காகவே. வக்கீல் தொழிலைக்கற்றுக் கொண்டார். திரு. சாஸ்திரியும் அப்படியே. சட்டங்கள் இயற்றுவதில் அவர்களது அறிவு சூன்யமாகவோ அற்பமாகவோ இருக்கலாம். ஆனுல், மசோதாக்களையும் சட்டங்களையும் குறித்த அவர்களது குறிப்புரைகள், சட்டத்தில் சிறந்த பிரமாணக்காரர்களாகவுள்ளவர்களது மதிப்பைத் தருவதாகும். நான் இதை உங்களுக்குச் சொல்லுவது என்னெனில், உங்களுக்குக்கதரில் நம்பிக்கையிருப்பதனுலேயே. உங்களுக்குக் கதரில் நம்பிக்கையிருப்பதாலேயே, இந்தப் புத்தகங்களை நீங்கள் படித்திருக்கிறீர்கள். அந்த நம்பிக்கையை நீங்கள் இப்பொழுது ஒளிபெறச் செய்யவேண்டும். புத்தகங்களினின்றும், எங்கே நூற்றல் நடந்து வந்தது என்பதை மட்டிலுமன்று—ஏனெனில், ஆலைத் தொழில் தோன்று முன்னர் அது எங்கும் நடந்து வந்ததென்பது நமக்குத்தெரியும்—ஆனுல் அது எப்படி இறந்தொழிந்தது என்பதையும், அதன் விளைவுகள் என்ன, அதை எங்கே உயிர்ப்பிக்கலாம் என்பதையும் கண்டுபிடிக்கவேண்டும். உங்கள் ஆராய்ச்சியை இன்னும் கூர்மையாகவும், காரியத்துக்கு இன்னும் அதிகமாய் இயைந்ததாகவும், இன்னும் அதிகத்தகுதியுடனும் செய்யுங்கள்."

—





# மதிப்புரை

### சுக்கிரநீதி.

(இது வடமொழி மொழிபெயர்ப்பு நூல். இத்தமிழ் நூலாசிரியர் மகிபாலன்பட்டி பண்டிதமணி திரு. மு. கதிரேசச் செட்டியார். வெளியிட்டோர் மேலைச்சிவபுரிச் சன்மார்க்க சபையார். டிம்மி க-க்கு அ, அளவில் (சஙo) பக்கங்கள் கொண்டது. விலை ரூ. ௨.)

இந்நூலை முற்றும் படித்தோம் வடமொழியினின்றும் தமிழுக்குக் கொண்டுவரப்பட்ட பொருள் நூல்களுள் இது எல்லாவற்றினும் சிறந்தது என்பதில் ஐயமில்லை. மநுமுதலிய மொழிபெயர்ப்பு நூல்கட்கும் இந்நூலுக்கும் நடையினும் பொருளினும் அணுவுக்கும் மலைக்கும் உள்ள வேறுபாடு உள. மநுவைப் படித்தால் பொருள் ஒருபுறமிருக்க, அதன் தமிழ்நடை மூளையை மந்தப்படுத்திக் கொண்டே செல்லும். இந்நூலின் தமிழ்நடை மிகவும் அழகுடையது. இந்நூல் நுதலும் பொருளும் பெரும்பாலும் ஏற்றுக்கொள்ளக் கூடியது. மநுவாதி ஒரு குலத்துக்கொரு நீதி இந்நூலில் அநேகமாக இல்லை.

என்றுலும், இந்நூலை நம்மனையார் முற்றும் உடன்பாடாகக் கொள்ளமுடியாது. முழுதும் எல்லோரும் உடன்படத்தக்க எந்த நூலும் காண்டல் அருமைதான். உடன்பட்ட கொள்கையைக் கொள்ளவும் மாறுபட்டவற்றைத் தள்ளவும் வேண்டுவதே. இந்நூலைப் படிக்கும் பொழுது குறித்துக் கொண்டன பல. விரிவஞ்சி அவற்றில் பெரும் பகுதி விடுக்கவேண்டுவதாயிற்று. சுருக்கமாகச் சில செப்புதும்.

இந்நூல் வகுப்புப் பிறப்புப்பற்றி என்று பேசுகின்றதா அன்று என்பது தெளிய முடியாததாக இருக்கின்றது. இரண்டு படவும் இயம்புகின்றது. உண்டு என்றும் இல்லை யென்றும் வற்புறுத்தப் பட்டிருக்கின்றன. இதன் மொழிபெயர்ப்பாசிரியர், முகவுரையில் பிறப்பினுல் வகுப்பு இல்லையென்பதே இந்நூலாசிரியர் கொள்கையென்றும், இதற்கு மாறுபட இருப்பது இடைச் செருகலாக இருக்கலாமென்றும், இதற்குச் சான்று அவர் அறுதியிட்டவற்றிற்கு அதிகமாகச் சுலோகங்கள் காணப்படுவதே என்றும் குறித்துள்ளார். இடைச்செருகல் எது என்று பகுத் துணர்தல் அரிதெனவும் ஆசிரியர் அறைகின்றுர். எனவே இக்கொள்கை கொண்ட சுலோகங்கள்தாம் இடைச்செருகல் என்று கரிந்து வெல்தல் யாங்ஙனம்? மாறுபட்ட கருத்துடையார் நாம் கொள்ளும் சுலோகங்களையே இடைச்செருக லென்பரேல் அதைத் தடுக்குமாறு என்? எங்கும் இடைச்செருகல் கூறி மாறுபட்டாரை வெல்தல் அருமையினும் அருமை. பண்டிதமணி கூறுமாறே சுக்கிரர் கருத்து இருக்குமானுல் அப்பொருளில் நமக்கு உடன்பாடே. பிறப்பினுல் வகுப்பு இல்லையென சுக்கிரநீதி வலியுறுத்திக் கூறுமிடம் அழகாகத்தான் இருக்கிறது. வேறு இடங்களில் வகுப்புப் பித்துப் பிடித்தவர்போல் பேசுவதை சுக்கிரநீதி யாசிரியர் விட்டொழித்தாரல்லர். பிறப்பினுல் வகுப்பு இல்லையென்று இயம்பும் ஓரிடத்திலேயே, (அத்தியாயம் உ-சுலோகம் ௫௫௩) "விவாகத்திலும் உணவிலுமே என்றும் ஜாதிகுலங்களை ஆராய்தல் வேண்டும்" என்று விளம்புகிறுர். இப்படியே ஆங்காங்கு பல காணப்படுகின்றன.

கள் முதலியன இலேசாகக் கொள்ளல் வேண்டும் என இந்நூல் இயம்புகிறது. இது அசுரரின் நீர்மை நோக்கி இயம்பப்பட்டதாக மொழிபெயர்ப்பாசிரியர் முகவுரையில் மொழிகிறுர். அவ்வாறு கொள்ள இந்நூலில் இடமில்லை யென நாம் கருதுகின்றேம். ஏன்? தாம் விரும்பா தொழியினும் அசுரர் ஒழுக்கங் கருதி உரைத்தார் என்று உரைக்கத்தக்கவாருக அங்குக் கூறப்படவில்லை. "கள் சிறிது உண்டால் பாதகமில்லை" என்று கூறியிருந்தால் அங்ஙனம் கொள்ளலாம். "சிறிதளவு உண்ணப்படும் கள் மதி நுட்பத்தையும் தூய அறிவையும் அஞ்சாமையையும் மனவுறுதியையும் தருவதாகும்" என ஓரிடத்தினும் மற்றோரிடத்தில் "சிறிது கட்குடித்தல் அறிவைத் தரும்" என்றும் ஆராய்ந்து மொழிகின்றுராகலின் இது தமக்கு உடன்பாடில்லாதிருப்பத் தமது சீடர்களை நோக்கிக் கூறினுரென்று கொள்தற்கில்லை. இப்பொருளின் உண்மை சிந்திக்கத்தக்கது.

பெண்மக்களை இந்நூலாசிரியர் மூன்றும் அத்தியாயம் சஙு, சஅ, கசக கஙச, கஅஅ, நான்காம் அத்தியாயம் ஐந்தாம் பிரகாணம் உாஅ, ஐந்தாம் அத்தியாயம் கஅ முதலிய சுலோகங்களால் பொய்யர்களென்றும் வஞ்சகர்களென்றும் பிறவுமாகப் பெரிதும் இழித்துக் கூறுவது கண்டிக்கத்தக்கது.

அரசியல் நெறிகளைப் பற்றியும் மக்கள் ஒழுகவேண்டிய முறைகளைப் பற்றியும் அழகுபடப் பல பொருள்கள் பகர்ந்திருக்கின்றுர். வீதிகள் ஆமை முதுகுபோல் இருக்கவேண்டுமென்றும் வழிச்செல்வோரை வினவும் முறையைப் பற்றியும் அரசன் குடிகளிடம் நடந்து கொள்தல் குடிகள் மன்னனிடம் நடந்துகொள்ளுதல் பற்றியும் பெரியார்களைச் சோதிக்கலாகாது என்பது பற்றியும் அதிகாரிகளை மாற்றல் வேண்டும் என்றும் அரசன் முதலாயினேர் எழுத்து மூலமே யாவும்செய்தல் வேண்டுமென்றும் மின்சாரசக்திமுதலியன பற்றியும்விரித்துச் செல்தல் இன்றைய மக்கட்கு அந்நாள் நாகரிகத்தின் பெருமையை எடுத்து விளக்குவதாம்

பெண்களை விற்றுப் பொருள் பெறுதல் கூடாவொழுக்கம் எனவும் மகப்பேற்றை விரும்பும் பெண்கள் வைரமணிகளை அணிதலாகாதென்றும் வழுத்துவது கவனிக்கற்பாற்று. "அரசன் மாணப்படுக்கையிற் கிடந்து சாதலாகாது; வீரனுகச் சாதல் வேண்டும்" என்று விளம்பியிருப்பது போற்றத்தக்கது.

சுக்கிர நீதியிலுள்ள வேடிக்கையான ஒரு சுலோகத்தை ஈண்டெடுத்துக் காட்டவேண்டுமென்பது நமது ஆசை.

"பெண் உருவத்தை விரும்புவள்; தாய் செல்வத்தையும் தந்தை கல்வியையும் சுற்றத்தார் குலத்தையும் விரும்புவர்; மற்றையோர் அறுசுவை மிக்க நல்ல உணவை விரும்புவர்."

ஈண்டுத் தடித்த எழுத்தில் காட்டப்பட்டிருக்கும் பகுதி விளையாட்டாகக் காணப்படுகின்றதன்றோ?உண்மையும் அதுதான்.

இச்சுக்கிர நீதியைத் தமிழ்மக்கள் படித்து அந்நாள் வருந்த நீதியின் தன்மையை அறியவேண்டுமென்பது நமது அவா. அந்நூலிலுள்ள பொறுக்கிய சிலவற்றைக் கீழே தருகின்றேம்.

"இவ்வுலகத்தில் அந்தணராதலும், அரசாதலும், வணிகராதலும், சூத்திராதலும், மிலேச்சராதலும் பிறப்பினுலில்லை; குணஞ் செயல்களாலேயே வேறுபடுக்கப் பட்டனர்."

"பிரமனிடத்துத் தோன்றியதனுல் எல்லோரும் எங்ஙனம் பிராமணராவர்? சாதியினுலும், தாய் தந்தையாலும் பிராமணத் தன்மை எய்தற்பாலதன்று."

"எவ்வரசனுக்கு அடக்கமில்லாத அமைச்சரும், வணக்கமில்லாத தாயத்தாரும், கொடியவராகிய புதல்வர் முதலியோரும் உள்ளாரோ, அவ்வரசனது அரசுரிமை திருவிழந்ததாகும்."

"பிறர்மனை நயத்தலையுடையானை இல்வாழ்வானெனவும், தன்கீழ்வாழுங் குடிகளை அலைப்பானை வீரனெனவும், பிறர் பொருளைக் கவர்ந்து தொகுத்தவனைப் பொருளுடையானெனவுங் கூறுதல் பொருந்தாது."

"குடிகள் தன்குறையிலைப் பழித்துத் தன்னை வெறுக்க ஒழுகுவோனும், அறிவுடையோராலும்பொருளுடையோராலும் விலக்கப்படுபவனுமாமாகிய அரசன் மிக இழிந்தவனுவான்."

"எப்பொழுதும் நல்லறிவுடையோரை வெறுத்தும், தீயவர்களோடு கூடி மகிழ்ந்தும், தன்பாலுள்ள தீயகுணங்களை யறியாமலும் ஒழுகுகின்ற அரசன், தனக்குத்தானே அழிவு செய்பவனுவான்."

"அரசன் பால் கொடையின்மையும், பிறரை அவமதித்தலும், கபடமும், வன்சொல்லும், மிகப்பெருந் தண்டமும் அமைந்திருப்பின் அவனைக்குடிகள் ஒழித்துவிடுவர்."

"மாறுபட்ட இக்குணங்களால் அரசனைக்குடிகள் பரம்பரையாக வெறுப்பர். தீய குணம் ஒன்றேமிக்க பழியை உண்டாக்குமாயின், அக்குணம் பலவாக அமையின் யாது செய்யா?"

"அரசனுடைய தீயகுணங்களை அவன் முன்னிலையிற் கலக்கமின்றி எடுத்துச் சொல்லுதலையும், அத் தீயகுணங்களை நற்குணங்களோடொப்ப வைத்து ஒரு பொழுதும் பாராட்டாமையையு முடையவனே சொலல்வல்லனுவான்."

"எப்பொழுதும் பொய்யொழுக்கமுடையாரை இழிந்தாரெனவும், உண்மை பொழுக்கமுடையாரை உயர்ந்தாரெனவும் மூறைபே சொன்னல் வேண்டும். இழிந்தார் நல்லோரினுஞ் சிறப்ப மேன்மைக் குணங்களை நன்கு வெளிப்படுத்திக் காட்டுவர்."

"கடையாயார் பொருளையே விரும்புவர். இடையாயார் பொருளையும் மானத்தையும் விரும்புவர். தலையாயார் மனத்தையேவிரும்புவர். மானமே பெரியார்க்குப் பொருளாகும்."

"இன்ன காலத்தில் இன்னது செய்வதென்று காலத்தை வரையறைப் படுத்திக் காரியம் புரிதல் வேண்டும். அங்ஙனம் காலவரையறை செய்யாமல் ஒன்றுஞ் செய்தலாகாது."

"நட்டோனெருவன் பின்னர்ப் பகைவனுயினும், முன்னர் நண்பனுயிருக்குங் காலத்தில் அவனுற் சொல்லப்பட்டனவும், அன்றி அவன்பால் தன்னுலறியப்பட்டனவும் ஆகிய பொல்லாங்குகளை ஒருபொழுதும் எவ்வாற்றுனும் வெளிப்படுத்திக் கூறலாகாது."

"பிறர் வயப்பட்டிருத்தலினும் மேலான துன்பமுமில்லை.தன் வயப்பட்டிருத்தலினும் மேலான இன்பமுமில்லை."

"செய்பத்தக்கன வின்ன தாதன வின்னவென்று அறியாமற்செருக்குற்று நெறிபிழைத் தொழுகுவோன் குருவாயினும் அவனுக்குத் தண்டம்செயற்பாலதாம்."

"ஒருவனுக்குப் பழியேநரகமாகும். அப்பழியை யன்றி மறுமை யுலகத்தில் நரகமென்பதொன்றில்லை."

"மனிதர் விரைந்து பெரும் பொருள் திரட்டுவாராயின், அது வஞ்சத்தாலன்றி ஆகாததொன்றும். பிறர் பொருளைக் கவர்ந்தாலன்றி எவனும் விரைந்து பெரும் பொருளாளனுக முடியாது. வஞ்சத்தாலன்றி ஒருவன் விரும்பியதை விரும்பியவாறு அடைய இயலாது."

### ஞானசூரியன்.

(ஆசிரியர் சிவானந்த சரஸ்வதி. வெளியிட்டோர் கானுகோத்தான் திரு. வை. சு. ஷண்முகச்செட்டியார்.)

இதன் ஆசிரியர் வேதத்தைப் பற்றிக் கூறுமிடத்து, "நல்லோர்க்கு இத்தகைய ஆபாச வார்த்தைகளைக் கேட்பதே ஈயம் உருக்கி விடுவதைக் காட்டினும் கஷ்டமாயிருக்குமென்பதில்ஐயமில்லை" என்று கூறுமாப்போல, வேதத்திலும் மநுவிலும் பிறவிலும்உள்ளனவாக இப்புத்தகத்திற் றந்திருக்கும் பொருள்களைப் படிக்கும்பொழுது ஐயமின்றி இப்பம் உருக்கி விடுவதை விடத் துன்பமாகவே இருந்த தெனினும் பொறுத்துக்கொண்டு இப்புத்தகத்தை முற்றும் படித்துத் தீர்த்து விட்டோம். அவ்வளவு ஆபாசங்கள் அவ்வடமொழி நூல்களில் உள்ளவாக இந்நூலில் எடுத்துக்காட்டப் பட்டிருக்கின்றது. நமக்கு வடமொழி தெரியாது. இங்குக் காட்டப்பட்டிருப்பன மிகவும் கீழ்மையுடையவாகத்தான் இருக்கின்றன. பெரிதும் உயர்வுடையனவாகக் கொள்ளப்படும் வேதம் முதலியவற்றின் நீர்மையை அம்மொழியறியா நம் தமிழ் மக்கள் உள்ளவாறு அறிந்து கொள்ளவேண்டுவது அவசியம். அதனை அறிந்து கொள்தற்கு இத்தகைய நூல்கள் சாலா. அபிப்பிராயம் எழுதாமல் நடுநிலை நின்று அப்படியப்படியே மொழி பெயர்த்துத் தமிழில் தால் வேண்டும். அவை ஆபாசமாக இருந்தாலும் அன்றி வேறெப்படி யிருந்தாலும் ஒன்றுமறியாமலேயே உயர்வாகக் கொண்டிருக்கும் அவற்றைத் தமிழருக்குஅறிவிக்க வேண்டுவது அவசியமே. இப்பணி இருமொழிப் பயிற்சியுமுள்ளார்க்கே எளிது.

மநுவின் தமிழ் மொழிபெயர்ப்பை நாம் படித்திருக்கின்றேம். மநு அறத்தை இந்நூலாசிரியர் பெரிதும் கண்டிக்கிறுர். மநுவை எந்த அறிஞரும் பின்பற்றமாட்டார் என்பது உறுதி. மநுவின் சட்டத்திற்குக் கீழ்ப்படிய வேண்டுவதில்லை என இந்நூலாசிரியர் நுவலுகிறுர் இது நமக்கு உடன்பாடே. மநு அறத்திற்கு எவரோ கீழ்ப்படிய முடியும்?

இந்நூலாசிரியர் பேரறிஞர் தயானந்த சரஸ்வதியை இடங்கள் தோறும் கண்டித்துச் செல்கிறுர். கண்டனத்திற்குக் காரணம் நூலில் காட்டப்படவில்லை. வேதத்திற்குப் புதுப் பொருள் செய்த ஒன்றே கண்டனத்திற்குரியதென்று நாம் உணர முடியவில்லை. இந்நூலில் கடுஞ்சொற்கள் பெய்யப்பட்டிருக்கின்றன. தமிழ் நடை அழகில்லையென நாம் நவில விரும்பவில்லை. மலையாள மொழியைத் தாய்மொழியாக உடையவர் ஆசிரியர் என அறிகின்றேமாதலின் அவர் இவ்வளவு எழுதினதே சிறப்புடைத்து. மேலும் இந்நூல் மலையாளத்தினின்றும் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டதென்பதை இந்நூலின் கஉ௯-ம் பக்கத்திற் காணப்படும் ஒரு குறிப்பானறிகின்றேம்.

இந்நூல் பிறப்பினுல் உயர்வுதாழ்வு இல்லையென்னும் கொள்கையை அடிப்படையாகக் கொண்டு எழுந்த அளவில் இதனை ஏற்கின்றேம். இந்நூலைச் சமய சம்பந்தமாக நோக்க நாம் விரும்பவில்லை. இந்நூல் கூறும் காசிக் கருவெட்டல் போன்ற பொருள்களின் உண்மையை நாமறியோம். அவை உண்மையேல் மிகவும் கொடுமை கொண்டனவாம். புலாலுண்பது கூடாவொழுக்கம் என்னும் கருத்தை இந்நூல் கொண்டிருப்பது போற்றத்தக்கது. அரசியற் கொள்கையில் இந்நூலை நாம் பலமாக முற்றும் கண்டிக்கிறேம். சஙு, ௫௩, சுக, கக௨ ஆகிய பக்கங்களில் ஆங்கில அரசியலே வேண்டும் என்னும் கருத்துப்பட இந்நூல் கூறுவது நாட்டன்பர் உளத்தைப் பெரிதும் புண்படுத்துவதாகும்.

—

# ஜ-ரெக்ஸ்.

சிறந்த குடும்ப அவுஷதம்.

சகலவிதமான வலி, இருமல், தலைவலி, பல்வலி, வெட்டு, முறி, ரணம், காயம், தொண்டைவலி, தேள் கொட்டு, பூச்சிகடிகள், கபம் முதலியவைகளுக்கு கைகண்டதும் உத்தமுமான மருந்து.

கொஞ்சம் துளிகளை யெடுத்து வலியுள்ள இடங்களில் தடவ ஜ-ரெக்ஸ் உடனே ஆஸ்வாசம் தரும்.

ஓர் முறை பரீக்ஷியுங்கள்.

**புட்டி 1-க்கு விலை ரூ 1-4.**

இராமநாதபுரம் ஜில்லாவிற்கும் புதுக்கோட்டை ஸ்டேட்டுக்கும் விற்பனை ஏஜெண்ட்ஸ்.

## மைசூர்ஜவுளிவர்த்தகசாலை

அம்மன் சந்நிதி, காரைக்குடி.

# மலிவு.

நயமான துணி, சிறந்த ரகம், உயர்ந்த தினுசு, எங்களிடம் அசல் திருப்பூர், இராஜபாளையம் வேஷ்டி, துண்டு, அச்சு சால்வை, கோட்டு துணி, சட்டை துணி, கைக்குட்டை, முதலியவைகளும், சொந்த தறியில் தயாரித்த அசல் பட்டு அங்க வஸ்திரம், கொடி, செடி, பூபோட்ட பட்டு வேஷ்டி, ஜரிகை வேஷ்டி, தப்பட்டா, அட்ரஸ் பேட்டு துப்பட்டா, கார்பட்டு, பனாரஸ் பட்டுசேலை, ரவிக்கை சீட்டி, கொட்டடித்துண்டுகள், கைலி, லுங்கி, லேஞ்சி முதலியவைகளும் விலை சல்லீசாகக்கிடைக்கும்.

1923–1924-ல் நடந்த அகில இந்திய தொழிற்காட்சியில் கைத்தறியில் சிறந்த வேலைக்காக நற்சாக்ஷி பத்திரங்கள் பரிசு பெற்றிருக்கிறோம்.

ஒருமுறை வாங்கிப் பாருங்கள்? லாபமடைவீர்கள்.

100-க்கு ரூபாய் 10 விதம் அட்வான்ஸ் சகிதம் ஆர்டர் அனுப்ப வேண்டும். பாக்கித்தகை வி. பி. யில் வசூலிக்கப்படும். அட்வான்ஸ் இல்லாத ஆர்டர்கள் கவனிக்கப்படமாட்டாது. இரங்கோன், சிங்கப்பூர், பினாங்கு முதலிய மலாய் நாடுகளுக்கு வேண்டிய ஜவுளி தினுசுகளும் இருக்கின்றன.

**K. R. வெங்கடகிரி சர்மா,**

ஸ்ரீராம் கதர் ஸ்டோர்ஸ்,

கீழப்பெருமாள் மேஸ்திரி வீதி, மதுரை.

---

வைத்திய சாஸ்திரத்தில் மகா நிபுணர்! மூப்புவைக் கண்டு பிடித்தவர்!!

1860-வருஷத்திய 21-வது ஆக்டுப்படி கவர்ன்மெண்டாரால் ரிஜிஸ்டர் செய்யப்பட்ட மதுரை சித்தவைத்திய சங்கம் பிரசிடெண்டாகிய பழனி ஆர். எம். கே. வேலுசாமி பிள்ளையவர்கள் மருந்துகள் தான் உண்மையான மருந்துகள்.

**நமது வைத்தியசாலை பழனியில் ஸ்தாபித்து 26-வது ஆகிறது. பழனியில் முதல் முதல் ஸ்தாபிக்கப்பட்ட வைத்தியசாலை இதுவேயாகும்.**

இவர் மருந்துகள் (முதல் தர) தேவ ஔஷதங்களென்று 1923-ல் திருநெல்வேலியில் கூடிய சித்தர் ஆயுள்வேத மெடிகல் கான்பரன்சிலும், 25—8—23-ல் சென்னையில் நடந்த ஷை கான்பரன்ஸ் அண்டு எக்ஸிபிஷனிலும், தங்கமெடலும் 'வைத்திய ஆசிரியர்' என்று பட்டமும் பெற்றவர்.

## (நீரழிவுக்கு) அப்ரேக் செந்தூரம்.

இதோ! ஒரு மருந்தசகும் செப்படாத வியாதி இந்த மருந்தில் தீருவது வெகு ஆச்சரியமாயிருக்கிறது. இப்படிசிரேஷ்டமான மருந்து இதுவரை வெளிவரவில்லை. எந்த மருந்திலும் தீராத வியாதிகள் இதில் அவசியம் தீரும். நீரழிவினால் ஜாஸ்தி போகும் நீரை நிறுத்தும்; தாகத்தைக் குறைக்கும்; நாட்பட்ட அஸ்தி வெட்டை நீரோடு இந்திரியம் உடைந்து விழுதல், ஈ, எறும்பு மொய்த்தல், நாவரட்சி, மலபந்தம், உடம்பெரிவு, வெள்ளை, வெட்டை, சடுப்பு, எரிச்சல் முதலிய சகலவித கர்ம வியாதிகளையும் கண்டிட்டாய் நிவர்த்தியாகும். நீரிலுள்ள சர்க்கரையைக் குறைத்து சரீர வெளுப்பை மாற்றி தேஜஸ் பலம் கொடுக்கும். நீரழிவால் வரும் பிளவை ரணங்களை ஆற்றும். ஆறாத பவுத்திர ஓட்டைகளை அடைத்து ரணத்தை ஆற்றிவிடும். பசி தீபனத்தை உண்டாக்கும் ஜீவாதார நரம்புகளை முறுக்கேற்றி, தாது புஷ்டியைக் கொடுக்கும். 40 நாள் மருந்து ரூ. **40.** சொர்ண அப்ரேக செந்தூரம் 50 நாள் 100 வேலை ரூ. **100.**

நற்சாக்ஷியைக் கவனியுங்கள்:—நான் நீரழிவினால் அதிக உபத்திரவப்பட்டுக் கொண்டிருந்தேன். ஒரு வேளைக்கு கால்படி வீதம் நாள் ஒன்றுக்கு 30 அல்லது 35 தரம் நீர் போய்க்கொண்டிருந்தது. அதிகப் பசியும் தாகமும் ஏராளமாயிருந்தது. சரீரம் மெலிந்து நடக்கவும் சக்தியில்லாமல் படுத்த படுக்கையிலிருந்தேன். தங்களுடைய அப்ரேக் செந்தூரத்தை சென்னையில் 15-நாள் சாப்பிட்டேன். என் வியாதி பூரா சொஸ்தமாகிவிட்டது. நீர் சாதாரணமாய்ப் போகிறது. பசி, தாகம், இயற்கை நிலைக்கு வந்துவிட்டது. சரீரத்திலுள்ள சுருக்கமெல்லாம் நீங்கி நல்ல ரத்தம் உண்டாகி சரீரம் நல்ல தேஜஸ் பலம் அடைந்துவிட்டது. சித்த ஆயுள்வேத வைத்திய விஷயமாய் தாங்கள் எடுத்துக்கொள்ளும் சிரத்தையானது மென்மேலும் விர்த்தியாகி பொது ஜனங்களுக்கு பேருதவி ஆவீர்களென்று சதா ஈஸ்வரனை பிரார்த்தித்துக் கொண்டிருக்கிறேன்.

எச். ராமசாமி அய்யர், தமிழ் பண்டிதர், முனிசிபல் ஹைஸ்கூல், பழனி.

தாளக பஸ்பமென்பது சாமானியமானதல்ல இது எல்லா வைத்தியர்களாலும் செய்துகொள்ள முடியாது. இதை நான் மூப்புவால் புகையாது கட்டி நீற்றிய பஸ்பமாகையால் நெருப்புக்கு அசையாது. மற்றவர்கள் செய்யும் பஸ்பத்தை நெருப்பின்மேல் வைத்தால் புகைந்து ஓடிவிடும், ஜாக்கிரதையாக பார்த்து வாங்குங்கள்.

## ஆர். எம். கே. தாளகபற்பம்.

சாப்பிடுங்கள்; இருமலுக்கு கைகண்டது; புகையாது.

எவ்வளவு நாட்பட்ட ரத்த காசம், க்ஷயம், ஈளை, இருமல், சுவாசம், கோழை, கபக்கட்டு, பீனிசம் இருந்தாலும் சரி 8 வித காசமும் இதில் அவசியம் தீரும். 20-நாள் மருந்து அனுபான சூரணத்துடன் விலை ரூ. **25—0—0**

நற்சாக்ஷி:—எனக்கு வயது 50. 15 வருஷகாலமாய் இருமல் இளைப்பு வந்து ரொம்பவும் கஷ்டப்படுத்திக் கொண்டிருந்தது. எத்தனையோ வைத்தியர்களிடம் எத்தனையோ மருந்துகள் சாப்பிட்டேன். ஒன்றிலும் பிரயோஜனமில்லை. தங்கள் தாளக பஸ்பம் 10-நாள் சாப்பிட்டதில் என் வியாதி பூராவும் தீர்ந்துவிட்டது.

(ஒப்பம்) சை. இ. அப்துல் கரீம், மேலத்தெற்கு தெரு, பண்டாரவாடை, தஞ்சாவூர் ஜில்லா.

**வைத்திய ஆசிரியர், ஆர். எம். கே. வேலுசாமி பிள்ளை,**

தந்தி விலாசம்:—"சித்தர், பழனி." சித்த வைத்தியசாலை, பழனி. (PALNI.)

நமது பிராஞ்சு வைத்தியசாலை:—என். தண்டபாணி கம்பேனி, 6–99 பவழக்காரத்தெரு, சென்னை. (பேப்பரை குறிப்பிட்டு எழுதவும்.)

# காந்தியடிகளின் சரிதம்.

## ஜூலுக் கலகம்.

காந்தியடிகள் "நவஜீவன்" பத்திரிகையில் எழுதியது.

## நான்காம் பாகம்.

### அத்தியாயம் உச.

ஜொகான்ஸ்பர்க்கில் நிலைத்து குடி புகுந்துவிட்டேன் என்று நான் கருதிய போதிலும், எனக்குத் திட்டமான வாழ்க்கை ஏற்படவில்லை. அமைதியுடன் (புதிய) வாழ்வை நடத்தலாம் என்று நான் எண்ணின சமயத்தில் எதிர் பாராத சம்பவமொன்று நிகழ்ந்தது. நேடாலில், ஜூலுக்கள் 'கலகம்' செய்யத் துவக்கிவிட்டார்கள் என, பத்திரிகைகள் தெரிவித்துவிட்டன. ஜூலுக்களின் பேரில் எனக்கு யாதொரு வருத்தமும் இல்லை. அவர்கள் இந்தியன் எவனுக்கும் தீங்கு செய்யவுமில்லை. கலகம் நேர்ந்ததோ வென்பதைப்பற்றி, எனக்கு சந்தேகம். ஆனால், ஆங்கில சாம்ராஜ்யம் உலகத்தின நன்மைக்காக ஏற்பட்டிருக்கிறது என்று நான் அப்பொழுது நம்பினேன். ராஜபக்தி மிகுதியால், சாம்ராஜ்யத்துக்குக் கேடு நினைக்கவே என்னால் முடியவில்லை. கலகம் ஏற்பட்டது சரியா தவறா என்று யோசித்து, நான் முடிவுக்கு வரவில்லை. நேட்டாலில், தொண்டர் காப்புப்படை இருந்தது. அதிலே, ஏராளமாக ஆட்கள் சேரலாம். கலகத்தை அடக்க, இந்தப்படை ஏற்கனவே அனுப்பப்பெற்றது என்று நான் (பத்திரிகையில்) படித்தேன்.

நெருங்கிய தொடர்பு கொண்ட நேட்டால்வாசி யென்று, நான் என்னைக் கருதிக்கொண்டேன். தேவையானால் இந்திய 'டோலி'ப் படையொன்றை அமைக்க, நான் தயாராயிருப்பதாக, கவர்னர் அவர்களுக்கு எழுதினேன். 'சரி' யென்று உடனே அவர் எனக்குப் பதில் அனுப்பினார்.

என்னுடைய தொண்டு, இவ்வளவு விரைவிலே ஏற்றுக்கொள்ளப்படும் என்று, நான் எதிர்பார்க்கவில்லை. நல்ல வேளையாக, நான் கடிதத்தை எழுது முன்னரே, அதற்குத்தேவையான ஏற்பாடுகளைச் செய்திருந்தேன். என்னுடைய தொண்டு ஏற்றுக்கொள்ளப்படுமானால், ஜொகான்ஸ்பர்க் குடும்பத்தைக் கலைத்துவிடுவதாக, தீர்மானங் கொண்டேன். போலக் அவர்கள் சிறிய வீட்டை அமர்த்திக்கொள்ளுவதென்றும், ஸ்ரீமதி காந்தி போனிக்ஸுக்குப் போய், குடியிருப்பதென்றும் தீர்மானமாயிற்று. இந்தத் தீர்மானத்தில், ஸ்ரீமதி காந்தி பரிபூரணமாக, ஒத்துழைத்தாள். இத்தகைய சங்கதிகளில், அவள் எனக்குக் குறுக்கே நின்றதாக ஞாபகமில்லை. எனவே, கவர்னரிடமிருந்து எனக்குப் பதில் கிடைத்த உடனே, வீட்டைக் காலி செய்து விடுவதென்று வீட்டுக் குடையவருக்கு ஒருமாத 'நோட்டீஸ்' கொடுத்துவிட்டு, சாமான்களில் சிலவற்றைப் போலீஸுக்கு அனுப்பி, மற்றவைகளை போலக் அவர்களிடம் வைத்து விட்டேன்.

தர்பனுக்குச் சென்று, தொண்டர்களுக்காக மனுப்பண்ணிக் கொண்டேன். ஒரு பெரியபடை தேவையில்லை. நாங்கள் இருபத்திநான்கு பேர்கள். அவர்களில் என்னைத்தவிர, நான்குபேர் குஜராத்திகள். மற்றவர்களில் ஒரு பட்டாணி முஸ்லீமைத் தவிர, ஏனையோர்கள் ஒப்பந்தத்திலிருந்து விடுபட்ட தென்னிந்தியக் கூலிகள்.

எனக்கு ஒருபதவி கொடுத்து, வேலையை எளிதாக்கும் பொருட்டும், வழக்கமாயுள்ள மாமூல்படிக்கும், தலைமை டாக்டரவர்கள் எனக்கு சார்ஜண்ட் மேஜர் என்றபதவியைக் கொடுத்து, என்னால் தேர்ந்தெடுக்கப் பெற்ற, மூவர்களை சார்ஜண்ட்களாகவும் ஒருவரைக கார்ப்பொரலாகவும் ஆக்கினர். இவைகளுக்கேற்ற உடைகளை நாங்கள் அரசாங்கத்தாரிடமிருந்து பெற்றோம். எங்களுடைய படை ஆறுவாரகாலம் வேலை செய்தது. கலகம் நடக்கும் இடத்தை அடைந்ததும், கலகம் என்ற பெயருக்குரிய நிகழ்ச்சி யொன்றையும நான் அங்கே காணவில்லை. அங்கு எதிர்ப்பு ஒன்றையும் காணவில்லை. சிறிய கலகம் பெரிய கலகமாக, பறைபறைவிக்கப்பட்ட காரணமென்னவெனின், ஜூலுக்களின் பேரில், புதிதாய் விதிக்கப்பட்ட வரியைக் கொடுக்க வேண்டாமென்று ஜூலு தலைவரொருவர்கூறி, வரிவசூல் செய்யச் சென்றவரை அவர் தாக்கினார் என்பதேயாகும். நிகழ்ச்சி எவ்வாறாயினும், என்னுடைய அனுதாபம் ஜூலுக்களின் பக்கம்தான். எனவே, கலகக களம் சென்றதும், காயமடைந்த ஜூலுக்களைப் பேணுவது எங்களுடைய முக்கியமான வேலையென்று தெரிந்துகொண்டவுடனே, நான் மிகுதியும் மகிழ்ச்சி கொண்டேன். அங்கிருந்த தலைமை வைத்திய உத்தியோகஸ்தர் எங்களை வரவேற்றார். வெள்ளையர்கள் காயம்பட்ட ஜூலுக்களைக் கவனிப்பதில்லையென்றும் அவர்களுடைய காயங்களில் சீழ் அதிகமாகக் கோத்துக்கொள்ளுகிறதென்றும் என்ன செய்வதென்று தமக்குத் தெரியவில்லையென்றும் அவர் வருத்தத்துடன் தெரிவித்தார். இந்தத் திக்கற்ற ஜனங்களைப் பேணுவதற்கு நாங்கள் கடவுளால் அனுப்பப் பெற்றவர்கள் என்று எங்களை வரவேற்று, சிகிச்சைக்குரிய சாமான்கள் யாவையும் எங்களுக்குக் கொடுத்து, தாற்காலிகமாக அமைக்கப்பெற்ற ஆஸ்பத்திரிக்கு எங்களை அழைத்துச் சென்றார். எங்களைக் கண்டதும், ஜூலுக்கள் மகிழ்ச்சியடைந்தார்கள். வேலி வழியாக, எங்களை வெள்ளைச் சிப்பாய்கள் பார்த்து, ஜூலுக்களுக்குக் காயம் காட்ட வேண்டாமென்று எங்களிடம் கூறுவார்கள். நாங்கள் அவர்களைக் கவனிப்பதில்லை. எனவே, அவர்கள் கோபம் கொண்டு, ஜூலுக்களை வாய்க்கு வந்தபடி திட்டுவார்கள்

வர வர, இந்த வெள்ளைச் சிப்பாய்களுடன் நான் நெருங்கிப்பழகினேன். அவர்கள் தலையிடுவதை நிறுத்திக் கொண்டார்கள். இவர்களுக்குத் தலைமை வகித்தவர்கள் கர்னல் ஸ்பார்க்ஸ், கர்னல் வைவி என்பவர்கள். இவர்கள் என்னை கஅகூகூ-ம் ஆண்டில், கடுமையாய் எதிர்த்தவர்கள். என்னுடைய மனப்பான்மையைக் கண்டு, அவர்கள் வியப்படைந்தார்கள். வேண்டுமென்றே, அவர்கள் நான் இருக்குமிடத்திற்கு வந்து, எனக்கு வந்தனமளித்தார்கள். அவர்கள் என்னை, சேனாபதி மாக்கன்லி அவர்களிடம் அழைத்துக் கொண்டுபோய், அவரிடம் என்னை அறிமுகப்படுத்தி வைத்தார்கள். இவர்களுடையது போர்த் தொழில் ஜீவனம் என்று வாசகர் எண்ண வேண்டாம். கர்னல் வைவி என்பவர் பெயர் பெற்ற ஒரு தர்பான் வக்கீல். கர்னல் ஸ்பார்க்ஸ் அவர்கள் தர்பானில் பெயர் பெற்ற ஒரு கசாப்புக் கடைக்காரர். சேனாபதி மாக்கன்லி அவர்கள் கீர்த்தி பெற்ற ஒரு விவசாயி. இவர்கள் யாவரும் தொண்டர்கள். எனவே, இவர்களுக்கு இராணுவப் பயிற்சியும் அனுபவமும் உண்டு.

காயம் பட்டு, எங்கள் வசமிருந்தவர்கள் சண்டையில் காயப்பட்டவர்களல்ல. அவர்களில் ஒரு பகுதியார் சந்தேகத்தின்பேரில் கைது செய்யப் பெற்றவர்கள். அவர்களைச் சவுக்கடி அடிக்க வேண்டுமென்று சேனாதிபதி உத்திரவிட்டிருந்தார். அடியினால், கடுமையான புண்கள் ஏற்பட்டன. இவைகள் கவனிக்கப்படாமையினால், சீழ்ப்பிடித்துக் கொண்டன. மற்றவர்கள் நேசமாயிருந்த ஜூலுக்கள். எதிரிகளினின்றும் இவர்களை வேறுபடுத்தித் தெரிந்து கொள்ளும் பொருட்டு, அடையாளச் சின்னங்கள் கொடுக்கப் பெற்றிருந்தும் தவறுதலாக, வெள்ளைச்சிப்பாய்களால், இவர்கள் சுடப்பெற்றார்கள்.

இந்த வேலையைத்தவிர, வெள்ளைச் சிப்பாய்களுக்காக டாக்டர் குறிப்பிட்ட முறைப்படி, மருந்து கலந்து கொடுக்க வேண்டிய வேலையும் எனக்கிருந்தது. இந்த வேலை எனக்கு மிகவும் எளிதான வேலையாகும். ஏனெனின், டாக்டர் பூத் அவர்களுடைய சிறிய ஆஸ்பத்திரியில் எனக்கு ஒரு வருஷப் பயிற்சி இருந்தது. இந்த வேலையினால், பல ஐரோப்பியர்களுடன் நான் நெருங்கிப் பழக நேர்ந்தது.

ஒரே இடத்தில் தரிக்காத சேனைக்குச் சாதகமாக, எங்கள் படை அமைக்கப்பெற்றிருந்தது. எங்கு அபாயம் அறிவிக்கப்பட்டதோ அங்கு செல்லும்படி அதற்கு உத்தரவு. அது குதிரைப் படை. எனவே, அவர்கள் போகிற இடத்திற்கு நாங்கள் 'டோலி' களை எங்கள் தோள்களில் சுமந்துகொண்டு, காலால் நடக்கவேண்டும். இரண்டு மூன்று சமயங்களில் நாங்கள் நாளொன்றுக்கு நாற்பதுமைல் நடக்க வேண்டியிருந்தது. ஆனால், நாங்கள் எங்குசென்றாலும், கடவுளின் வேலையைச் செய்கிறோமென்ற மகிழ்ச்சி மட்டும் எனக்கு உண்டு. தவறுதலாகச் சுடப்பெற்ற ஜூலு நண்பர்களை 'டோலி' களில் சுமந்து, கூடாரத்துக்குத் தூக்கிக்கொண்டுபோய், அவர்களைப் பேணுவது எங்களுடைய வேலையாகும்.

## "பிரிட்டிஷ்கொடி" பக்தர்.




திரு. சீனிவாஸ சாஸ்திரியார்:—இங்கே பாருங்கள், ராஜா சாஹேப்' பிரிட்டிஷ் கொடியை என் என்னிடமிருந்து பிடுங்குகிறீர்கள்? உங்கள் கோயமுத்தூர் இடி முழக்கங்களையெல்லாம மறந்து விட்டதேன்? காங்கிரஸில் நுழையப் போகிறீர்களெனவும் பின்னும் ஏதேதோ வெல்லாம் சொல்லப்பட்டதே. என் இப்பொழுது பிரிட்டிஷ் கொடியைத்தாங்குகிறீர்கள்?

பனகால் அரசர்:—உங்கள் விஷயம் என்ன, திரு. சாஸ்திரியாரே? நீங்கள் மகாத்மாவின் சீடர் என்று புகழ்ந்தார்களே. பின்னால் தென்னாப்பிக்காவில் போய் என்ன என்னவோ எல்லாம் உளறியிருக்கிறீர்களே; அதேன்?

## உள்ளூர்.

| | |
|---|---|
| சென்னை உண்டியல் வட்டம் | ０-௪-０ |
| ரங்கூன் உண்டியல் வட்டம் | ௪-௫-０ |
| பவுன் (பொற்காசு) | ௧௬-௧-௮ |
| வெள்ளி ரூபாயிடை | ０-௯ |

தட்ப வெப்ப நிலை:—

உயர்ந்த அளவு-அகூ

குறைந்த அளவு-அ௦

காரைச் சிவனடியார் திருக்கூட்டக் காரியதரிசி எழுதுவது:—ஜீவகாருண்யமே சிறந்த தர்மமெனக் கொண்டு உழைத்து வரும் சங்கங்கள் வாசகசாலைகள் முதலிய பொது ஸ்தாபனங்கள் யாவும் தங்கள் முழு விலாசத்தையும் தெரிவித்துக்கொள்ள வேண்டுகின்றோம். அப்படித் தெரிவித்துக் கொள்ளுபவர்கட்கு எங்கள் திருக்கூட்டத்தினின்றும் வெளிவரும் பிரசுரங்கள் சுவரொட்டித் தாள்கள் படங்கள் முதலியன இனாமாக அனுப்பப்பெறும்.

## பொருள் அடக்கம்.






மன்னவர் தமக்கும் அஞ்சேன்
மாண்பெரும் நாட்டிற் காக
என்னுயிர் தனையும் ஈவேன்
எதற்குமியான் யாண்டும் அஞ்சேன்
பன்னரும் பாரதத்தாய்
பண்டைவாழ் வெய்தப் பாரில்
ஒன்னலர்க் கஞ்சா நல்ல
ஊழியம் தலைமேற் கொண்டேன்.


ஊழியன் காரைக்குடி
பிரபவ-௵ ஐப்பசி-மீ உகூஉ


# வீணை முயற்சி.

கொக்கின் தலையிலே வெண்ணெய் வைத்து, அந்த வெண்ணெய் உருகி, கொக்குக் கண்கள் தெரியாமற் போகிற சமயத்திலே, அதைப்பிடித்து விடலாம் என்ற வீண் ஆசை கொண்டிருடபவர்கள் இந்த உலகில் பெரும்பான்மையோராவார்கள். கொக்கின் தலையிலே வெண்ணெய் வைக்கும்படியான சந்தர்ப்பமும் வசதியும் ஏற்படுமாகில், அந்த நேரத்தில் அதைப் பிடிப்பது மிகவும் எளிது என்பது மட்டும், இத்தகைய வீணாசைக்காரர்களுக்குப் புலனாவதில்லை. எவ்வாறு வெண்ணெயை வைப்பது என்பது தான் கேள்வி. இந்தக் கேள்விக்கு நேரே, பெரும்பான்மையோர் விடையளிப்பதில்லை. வைத்து விட்டால் பிடிப்பது எளிது என்று பிரசங்கமழை பொழிவார்கள். இத்தகைய மனப்பான்மை உலக மக்களுக்குப் பொதுவானதால, இதை விநோதம் என்று சொல்லுவதற்கில்லை. என்றாலும் இந்த உபாயம் கையாளப்படும் பொழுதெல்லாம், கையாளுபவர்களைக் கண்டு ஏனையோர் நகையாடுவார்கள். தான் தவறு செய்வான் என்ற காரணத்தைக் கொண்டு, பிறன் தவறைக் கண்டு நகையாடாமலிருக்க வேண்டுமென்று கூறுவது, எதிர்பார்ப்பது அவ்வளவாகப் பொருத்தமுள்ள செயலல்ல. பலவீனம் நிறைந்த ஜனசமுதாயத்திலே, நகைப்பும் இல்லாமற் போயின், அந்த ஜனசமூகம் நீண்டகாலம் உயிருடனும் வலிமையுடனும் வாழ முடியாது. எனவே, சுதந்திரம் இழந்து வாழும், நாம் நம்முடைய நகைப்பு உரிமையையும் இழந்துவிட வேண்டாம். நிற்க,

சென்ற இரண்டுமூன்று நாட்களாக தில்லிமா நகரில் ஒரு சம்பவம் நடந்து வருகின்றது. இந்திய ஜனசமூகத் தலைவர்களை வைஸிராய் அவர்கள் பேட்டி கண்டுவருகிறார். இவ்வாறு பேட்டி காணப்பட்டவர்களுள் காந்தி ஒருவர். பேட்டி காண வேண்டுமென்று வைஸிராய் அவர்கள் காந்திக்குத் தந்திசொன்னபொழுது, மகாத்மா திருப்பூரிலிருந்தார். மங்களூரில் தமது பிரயாணத்தை முறித்துக்கொண்டு, காந்தி தில்லிக்குப் போய்ச் சேர்ந்தார். கூப்பிட்டு அனுப்பிய சங்கதி யாருக்கும் அப்பொழுது தெரியவில்லை. அனுமானத்தாலும் துண்டுத் துணுக்குச் செய்திகளாலும், வைஸிராய் அவர்கள் இந்தியத் தலைவர்களைப் பேட்டி கண்ட காரணம் யாது என்று ஒருவாறு அறியக் கிடக்கின்றது. வைஸிராய் அவர்களின் இந்த முயற்சி, கொக்கை வெண்ணெய் வைத்துப் பிடிக்கும் விநோதத்தை நமக்கு ஞாபக மூட்டியது.

வைஸிராய் அவர்கள் தலைவர்களை எதற்காகக்கூப்பிட்டனுப்பினர்? ராயற் கமிஷன் சம்பந்தமாக. அடுத்தபடியாக என்ன சீர்திருத்தம் எவ்வளவு வரையில் கொடுக்கலாம் என்பதை விசாரித்துத் தெரிந்துகொள்ள, ஆங்கிலப் பார்லிமெண்டு சபையார் கமிஷனொன்றை அடுத்த ஆண்டில் இந்தியாவுக்கு அனுப்பப் போகிறார்கள். அந்தக் கமிஷனில், இந்தியப் பிரதிநிதிகள் இடம்பெறப் போவதில்லையாம். ஆங்கிலேயர்கள் மட்டும் அங்கத்தினர்களாக விருக்கும் கமிஷனை இந்தியர்கள் ஏற்றுக்கொள்ள வேண்டுமாம். பேட்டிகள் இதற்காகத்தான் என்று கூறப்படுகின்றது. மறுமுறை சீர்திருத்தங்கள் வழங்கப்பெறும் பொழுது அதிகமாகக் கொடுக்க, கமிஷனுக்கு இந்திய அரசாங்கத்தார் சிபார்சு செய்வார்களாம். எவ்வாறு நடந்துகொண்டால்? இந்தியர்கள், வரப்போகும் கமிஷனைப் பகிஷ்காரம் செய்யாமலிருந்தால், அதிகமான சீர்திருத்தம் வழங்குவதற்குச் சிபார்சு செய்யப் பெறுமாம்!

இப்பொழுது நாம் கவனிக்க வேண்டிய சங்கதிகள் சிலவுண்டு. ராயல் கமிஷனைப்பற்றி அசைக்க முடியாத கருத்துகளை நாம் கொண்டிருக்கிறோம். ஒவ்வொரு மனிதனும் தனது செயலுக்குத் தானே பொறுப்பாளியாவான். அதற்கான பயனை அவன்தான் அனுபவிக்க வேண்டும், அறிவும் உணர்ச்சியுமில்லாத மனிதனை எவனும் கைதூக்கிவிட முடியாது. இந்தியா முற்போக்கு அடைய வேண்டுமானால், இந்தியா விடுதலையடைய வேண்டுமானால், அதன் பொருட்டு, இந்தியாதான் உழைத்தாக வேண்டும். பிறன் உழைப்பால், எவனும் உயர்வடைய மாட்டான்; உயர்ந்த பதவியை அடைந்தாலும், அதை நீடித்த காலத்திற்குத் தன் வயம் வைத்துக்கொண்டிருக்க முடியாது: பலவீனம் நிறைந்த இந்தியாவுக்கு ஆங்கிலநாடு சுயராஜ்யம் வழங்கிவிடுவதாக வைத்துக்கொள்ளுவோம். சுயராஜ்ய பாக்கியத்தைக் காப்பாற்றிக் கொள்ள இந்தியாவுக்கு வல்லமை இல்லாமற் போயின், ஆங்கிலநாட்டின் நன்முயற்சியால் இந்தியாவுக்கு என்ன இலாபம் ஏற்படும்? மேலும், இந்தியர்களின் சுயராஜ்யத்தகுதியை எவ்வாறு சோதனை செய்வது என்பது நமக்கு விளங்கவில்லை. ஆங்கில நாட்டில் ஜனநாயக உணர்ச்சியும் அரசியல் அமைப்பும் ஏற்படுவதற்கு முன்னர், பொறுப்பற்ற கொடுங்கோன்மை இருந்து வந்தது. ஜனங்களின் அரசியல் விருப்பத்தை, கொடுங்கோல் மன்னர்கள் எவ்வாறு தெரிந்து கொண்டார்கள்? கமிஷன்கள் மூலமாயல்ல. நாட்டின் பொதுவான கலக்கத்தைக் கொண்டு பலகால், அவர்கள் புத்தி தெளிந்தார்கள். சில சமயங்களில் சிறு கலகங்களும் ஒரு சமயம் அரசனுக்கும் குடிமக்களுக்கும் போரும் நிகழ்ந்தது. ஜனங்களின் மனப்பான்மை கொடுங்கோலர்களுக்கு நன்கு தெரிந்தது. பொது ஜனங்களின் விருப்பப்படிக்கு அரசியலும் அமைக்கப் பெற்றது. இத்தகைய முறைகளை இந்தியா கையாள வேண்டுமென்பது நமது விருப்பமல்ல. இந்தியாவுக்கு சுயராஜ்யம் வழங்குவதில், ஆங்கிலப்பார்லிமெண்டு சபையாருக்கு உரிமை எவ்வாறு ஏற்பட்டது?

வரப்போகும் கமிஷனில் இந்தியர்கள் இடம் பெறப்போவதில்லையோ என்பதைப்பற்றி, நாம் வருந்தவில்லை. இந்தியாவின் சுயராஜ்யத் தகுதியை நிர்ணயிக்க, ஆங்கிலப் பார்லிமெண்டு மகாசபைக்கு யாதொரு உரிமையுமில்லை என்பது நமது வாதமாதலின், அந்தக் கமிஷனில் இடம் பெறப்போகிறவர்களைப்பற்றி நமக்குக் கவலை எதுவுமில்லை. கையில் முதல் இல்லாதவன் வட்டி நஷ்டத்தைப்பற்றிச் சிறிதும் சிந்திப்பானா? மேலும் எந்தக் கமிஷனாலும் இதுவரையிலும் இந்தியாவுக்கு நன்மை ஏற்பட்டதுமில்லை. இது அனுபவம். எனவே, கமிஷனைப் பற்றி நமக்கு யாதொரு கவலையுமேயில்லை. இனி, வைஸிராய் அவர்களின் எண்ணம் பலிக்குமா என்று பார்ப்போம்.

இந்தியர்கள் வரப்போகும் கமிஷனை பகிஷ்காரம் செய்யவேண்டும் என்பது நமது கருத்தாகும். இந்த முடிவுக்கு மேலே கூறப்பெற்ற இரண்டு காரணங்களே போதுமானதாகும். வேண்டுமானால், இன்னுமொரு காரணம் கூறுவோம். கமிஷன் முன்னர் காங்கிரஸ்காரர்கள் இப்பொழுது சாட்சியம் கூறலாகாது. காங்கிரசுக்கு இப்பொழுது பலவீனமதிகம். பலவீனர்கள் பலவான்களுடன் ராஜிபேசக்கூடிய காலங்கள் பலவுள. ஆனல் அந்தக் காலம் இதுவல்ல. மேலும் நாடு ஒற்றுமைப்படுவதற்கு, சிற்சில சந்தர்ப்பங்கள், சாதனங்கள்தான் உண்டு. பொதுப் பகை, பொதுவான அச்சம், பொதுவான இலாபம், இவை போன்ற தூண்டுதல்களின் மூலமாகத்தான், ஒரு கூட்டமோ, ஒரு சமுதாயமோ, ஒருமனப்படமுடியும். வரப்போகும் ராயல் கமிஷனை பகிஷ்காரம் செய்ய முயற்சி செய்தால், நாடு ஒற்றுமைப் படக்கூடும். பலவீனத்தால் துன்புற்றுவாழும் இந்தியா, இந்தக் கமிஷனைப்பகிஷ்காரம் செய்வதால், சக்தி பெறும் என்ற நம்பிக்கை நமக்கு உண்டு. எனவே, வைஸிராய் அவர்களின் நோக்கத்துக்கு இசைந்து, தலைவர்கள் கமிஷனை ஏற்கலாகாது என்பது நமது வேண்டுகோள். கமிஷன் வரட்டும், பார்த்துக் கொள்ளுவோம் என்று அசட்டையாகத் தலைவர்கள் இருக்கலாகாது. இப்பொழுது முதற்கொண்டே பகிஷ்காரத்திற்கான முயற்சியைச் செய்யவேண்டும். சென்னைக் காங்கிரசிலும், இதை யொட்டித் தீர்மானம் நிறைவேறல் வேண்டும்.

பேட்டி கண்டவர்களுள் காந்தி ஒருவர் என்று கூறினோம். அவர் நடந்து கொண்டமுறை மிகவும் போற்றத்தக்கதாகும். வைஸிராய் அவர்கள் தமது காரியப்பூர்த்திக்காகத் தலைவர்களுக்கு அழைப்புக் கொடுத்தார். வைஸிராய்க்குத் தமது காரியத்தில் கண். வைஸிராயின் பேட்டிக்காகத் தமது அரிய கதர்ச் சுற்றுப் பிரயாணத்தைக் காந்தி நிறுத்திவைத்தார். வைஸிராய் அவர்கள் காந்தியை வரவழைத்த காரியமோ அற்பமானது. எனவே, காந்தி என்ன செய்தார்? காந்தி வைஸிராயிடம் கதரைப்பற்றிப் பேசினர். வைஸிராய் ஆங்கில நாட்டின் பிரதிநிதி; அதிகாரவர்க்கத்தினரின் தலைவர். காந்தியோ இந்தியாவின் பிரதிநிதி; தேசபக்தர்களின் தலைவர். இவர்களிருவரின் மனப்பான்மை எந்தத் துறைகளில் செல்லுகின்றது என்பதை நண்பர்கள் பார்க்கவேண்டும். இந்தியாவின் வறுமையை ஒழிப்பதற்குத் தோன்றிய கதரின் அபிவிருத்திக்காகச் சுற்றுப் பிரயாணம் செய்த காந்தியை அற்ப விஷயத்திற்காக வைஸிராய் கூப்பிட்டனுப்புகின்றார். காந்தியும் இணங்குகின்றார். இது இந்தியாவின் மரியாதைக் குணத்தைக் காண்பிக்கின்றதல்லவா? அவரவர் காரியத்தை அவரவர் பார்க்கவேண்டும் என்ற உத்தம உபதேசத்தைப் பின்பற்றி, காந்தியும் வைஸிராயும் நடந்துகொண்டார்கள். வைஸிராய் காந்தியிடம் கமிஷனைப் பற்றிப் பேசினர். காந்தி வைஸிராயிடம் கதரைப் பற்றிப் பேசினர். காரியத்தையும் கண்ணியத்தையும் விடாமல் மரியாதையுடன் நடந்து கொண்ட காந்தியை நாம் மனமாற வாழ்த்துகின்றோம். ஜனசமூகத் தலைவர்கள் நடந்துகொள்ள வேண்டிய முறைக்கு இது ஒரு மாதிரி என்றும் குறிப்பிடுகின்றோம்.



# அடிகளும் : : : : : : தமிழ் நாடும்.

அடிகள் என்பது இன்னுர் என நாம் விளக்கிக் கூறவத்தால் அறிவுலகம் எள்ளி நகையாடும். இந்நாள் அடிகள் என்று கூறினல் அது காந்தியடிகளைத்தவிர வேறு எவரையும் குறியாது என்பதை, ஒப்பாருமிக்காருமுலகில் என்றுமில்லாத அடிகள் கொள்கையை மறுப்பார் கூட, அறிவு பெற்றிருப்பரேல், உடன்பட்டே தீர்வர். அடிகள் என்னும் சிறப்புப் பெயர்க்கு காந்தியை விடப் பொருத்தமானவர் எவரேயிருக்க முடியும்? தன்மை கொண்டு நோக்குங்கால்.

அடிகள் தமிழ் நாட்டிற் பல இடங்கட்குப் போந்து திரும்பிவிட்டார்கள். தமிழ் நாட்டார் அடிகளைப் போன்போடு வரவேற்று முகமன் மொழிந்து கதர்நிதிக்குப் பொருள் கொடுத்து அடிகளின் அரிய உரைகளைச் செவிமடுத்து இன்பக்கடலாடினர்கள். தமிழ் நாட்டின் சார்பாகக் கதர் நிதிக்குக்கிடைத்த பொருள் (ககூ௩,௬௦௫—௫—௬) என திரு இராஜகோபாலாச்சாரியார் வெளியிட்டிருக்கும் கணக்கினின்றும் தெரிகின்றோம். தமிழ் நாட்டின் செல்வ அளவுக்கு இது போதிய அளவுடையதன்றெனினும் கிடைத்தது கொண்டு மகிழ்ச்சியடைய வேண்டுவதே.

சேர்ந்த பொருளில் ஒரு காசுகூட அடிகள் கொண்டு செல்லவில்லை என்பதைக் காந்தியும் பணந்தானே கேட்கிறார் என்று கழறுபவர் அறிதல் வேண்டும். சேர்ந்த பொருளனைத்தும் திருமயிலை அர்ப்பன் பாங்கிலும் திருப்பூர் காதி வஸ்திராலயத்திலும் ஈரோடு அகில பாரத சர்க்கா சங்கத்திலும் இருப்பதை வேறுபக்கத்திற் காணப்படும் கணக்கு வெளியீட்டானறியலாகும். தமிழ் நாட்டில் சேர்ந்த பணம் தமிழ் நாட்டுக்கதர்ப் பொருக்கிற்கே பயன்பட விருக்கிறது.

அடிகள் தமிழ்நாட்டில் அருளிய மணி மொழிகள் பொன்போற் போற்றத்தக்கவை. தமிழ் நாட்டிற்குப் பெருங்குறையாக விருக்கும் சில பொருள்களை நிறைசெய்வான், தமிழ் நாட்டாரிடம் கொண்ட போன்பு காரணமாக அடிகள் எடுத்துரைத்த மெய்யுரைகள் அறிஞர் சிந்தையை விட்டகலாதன. கோவில்களைப்பற்றி அடிகள் அருளிய ஆணித்தரமான சொற்களை வாதமுறையில் மறுத்துவெல்ல யாரே வல்லார்? வீணே கதறுவதாலும் பதறுவதாலும் படபடப்பதாலும் என்னே பயன்? உண்மையை உரைத்ததால் என்ன முழுகிப்போய் விட்டது? உண்மையை உரைப்பதால் அழியும் ஒன்று எவ்வளவு நாட்கள் நிலைபெறும்? தமிழ்நாடு கடந்து சென்ற பிறகுங்கூட பம்பாயில் ஒரு நிருபரிடம் அடிகள் தமிழ்நாட்டிற் கோவில்களைப் பற்றித் தாங்கூறிய கருத்தை மாற்றிக் கொள்ளக் காரணமில்லை யென்பதைத் தெளிவாக உரைத்திருக்கின்றார்கள். தமிழ்நாட்டார் தங்களோடு கலந்து இன்றியமையாத பொருள்களை எடுத்துக்கூறிய அடிகட்கு என்றும் சிறப்பாகக் கடமைப்பட்டிருக்கின்றார்கள்.

அடிகளின் தமிழ்நாட்டு வரவு இனிது முடிந்தது. அடிகள் தமிழ் நாட்டு வரவில் உடல் மெலிவின்றித் திரும்பச் சென்றார்கள். அடிகள் உடலை ஓம்பிய பெருமை அறிஞர் ராஜகோபாலரைச் சேர்ந்தது. அடிகளுக்கு அளந்து இவ்வளவு ஒழுங்குபட வேலைகளை அமைத்திராவிட்டால் அடிகள் உடல்நிலை சீராகவே இருந்திருக்க முடியாது. அடிகளை ஒவ்வொருவரும் தனித்தனியே காணவேண்டுமென்றும் பேசவேண்டுமென்றும் தூண்டிய பேரவாப்படி விடாமைக்காக அன்பர் ராஜகோபாலர் சில பலரால் கடியப்பட்டபோதினும் பாதகமில்லை. இது உலகில் யாண்டும் இயற்கையே. பிறர் அவாவை விட அடிகள் இனிய வாழ்வே வேண்டப்படுவது. எனவே அடிகளின் தமிழ்நாட்டு வரவை இனிது முடித்து அடிகள் உடலைப் பேணி அனுப்பிய ராஜகோபாலரைப் போற்றுகிறோம். அடிகளின் இலங்கை வருகை அணித்தே இருக்கிறது. இலங்கையில் தமிழ்மக்கள் அடிகள் உளமறிந்து ஆவன புரிவார்கள் என நம்புகிறோம்.

# இடி முழக்கம்.

### பழைய நாட்டன்பர்.

பழைய நாட்டன்பராகிய திரு. வ. உ. சிதம்பரனாரவர்கள் சேலத்தில் ஒரு அரசியல் மகாநாட்டில் தலைமை தாங்கியுள்ளார். அவர் கூறிய தலைமை முன்னுரையைப் படித்தோம். அதைப்பற்றி நீண்டு எழுத விருப்பம். இடமின்மை நோக்கி அது விடவேண்டுவதாகிறது. பழைய சிதம்பரனார் தொண்டை மறக்கமாட்டோம். புதிய வக்கீல் சிதம்பரனார் கருத்திற்கும் அரசியல் உலகில் தலைநிற்பார்க்கும் தொடர்பு சிறிதுமில்லை.

### நீல்சிலைக்கேள்வி.

சட்ட சபைகளில் கேட்கப்படும் கேள்விகளுக்கு, சர்க்கார் தரப்பில் அளிக்கப்படும் பதில்களின் பொறுப்பற்ற போக்கைக் குறித்து, நாம் பன்முறையும் எழுதியுள்ளோம். நீல்சிலை பற்றி, நவம்பர் ௪உ சென்னைச் சட்டசபையில் சில கேள்விகள் கேட்கப்பட்டன. அவற்றிற்கு, சர்க்கார் தரப்பில் அளிக்கப்பட்ட பதில்கள் எப்பொழுதையும் போலவே, அலட்சியமும், பொறுப்பற்றதன்மையும் கொண்டு நிற்கின்றன. அரசியற் போக்கைக் கொண்ட ஒரு இயக்கம் எழுந்து அதற்குப் பொதுஜன ஆதரவும் ஓரளவு தோன்றுமாயின், எந்த நாகரிக அரசாங்கத்தினரும், அவ்வியக்கம்பற்றிய உண்மைகளை ஆராயமுந்துவது இயல்பு. ஆனல், சென்னை அரசாங்கத்தினரோ, நீல்சிலைக் கிளர்ச்சியை வெகு அலட்சியம் செய்வது போல, இங்கு அளிக்கப்பட்ட விடைகள் புலப்படுத்துகின்றன. நீலைப்பற்றிக் கூறப்படும் கொடுமைகளின் உண்மைகள் என்ன என்பதைச் சர்க்கார் அறிந்து கொள்ள முயற்சிக்கவில்லை. நீல்சிலை இயக்கத்தினல் சிறை புகுந்தவர் வழக்குகளில், விதிக்கப்பட்ட தீர்ப்புக்களைச்சட்ட உறுப்பினர்பார்த்தாரா என்று ஒருவர்கேட்டதற்கும், அவர் இல்லையென்றார். நீல்சிலையை அப்புறப்படுத்த வேண்டியதில்லை என்பது அரசாங்கத்தின் தீர்மானமாம் சட்டசபையின் தீர்மான ஆதரவு அவர்களுக்குக் கிடைத்து விட்டதாம். பொது ஜனங்களின் தீவிர உணர்ச்சியை சர்க்கார் உணரும்படி செய்தால், இந்த அலட்சிய மனப்பான்மை சர்க்காரிடம் இருக்குமா?

### என்ன சூழ்ச்சி!

ஆங்கிலநாடு, இந்தியாவை, அதன் சுதந்திர உணர்வைக் கொன்று, அடிமையாகவைத்து ஆள, நியாயமற்ற முறைகள் பலவற்றைக் கைக் கொள்ளுகின்றது என்றால், நம்பாத மனிதர்கள் பலருண்டு. கன்னிமேயோ என்ற 'சாக்கடைப் பரிசோதகர்' எழுதிய 'அன்னை இந்தியா' என்னும் புத்தகத்தின் ஆபாசத்தைப்பற்றி நண்பர்களுக்குத் தெரிந்திருக்கும். இந்தியாவை உலகத்தின் கண்களில் எவ்வளவு இழிவுபடுத்திக்காட்ட வேண்டுமோ அவ்வளவும் செய்வது அப்புத்தகம். இந்தியாவின் சில தீமைகளை மட்டிலும் திரட்டி, படிப்பவர்க்கு இந்தியாவின்மீது அளவற்ற வெறுப்பும் தாழ்ந்த எண்ணமும் உதிக்குமாறான முறையில் அவற்றைத் தொகுத்துக் கூறுவது அப்புத்தகம். இந்தியாவின் மீது, இந்தக் கன்னிமேயோவுக்கு ஏன் இவ்வளவு சிரத்தை? இப்புத்தகம் இந்தியாவை ஆள்வோரது தூண்டுதல் என்று முன்னர் சந்தேகிக்கப்பட்டது. சீர்திருத்தக் கமிஷன் வரப்போகிறது. கமிஷன்களின் வழக்கம்போலவே, அதுவும் கையை விரித்து விட்டுத்திரும்பும். அப்பொழுது, இந்தியா கொதிப்படையலாம், அது உலகத்தின் அவமதிப்பைப் பிரிட்டனுக்கு அளிக்கக் கூடும். இதற்கெல்லாம் முன்னல், ஒரு அணை கோலிவைக்க வேண்டாமா? இந்திய அரசாங்கத்தார் இந்தியா மந்திரி காரியாலயத்தின் மூலம் ஐயாயிரம் பவுன்கள் கன்னிமேயோவுக்கு அளித்ததாக இப்பொழுது ஒரு செய்தி கூறுகிறது. இது உண்மையாயின், ஆங்கில அரசாங்கத்தின் சூழ்ச்சியின் கேவலம் எத்தகைத்தாகும்?

### எடுத்தாளும்வகை.

ஒருவர் தமது அபிப்பிராயங்களுக்குச் சாதகமாக, பிறர் நூல்களிலிருந்தோ பேச்சிலிருந்தோ எடுத்தாள்வது வழக்கம். ஆனல். கண்டதற்கெல்லாம், கண்ட நூலிலிருந்தெல்லாம் எடுத்தாள்வதென்பதுபொருத்தமுடையதன்று. தெளிந்த காரணங்காட்டி, தொகுத்து, முறைபடப் பேச வேண்டிய ஒன்றுக்குப் பிறரை எடுத்தாள வேண்டியதேவையில்லை. எடுத்தாள்வதை விஷயநோக்கத்துக்கும், உயர்ந்த அறிவாளிகளென உலகம் கொண்டாடுபவரது அபிப்பிராயங்களை எடுத்துக்கொண்ட விஷயங்கள்பற்றிக் காட்டுவதற்குமே உபயோகிப்பது பொருத்தமுடையதாகும். கொழும்புச் சட்டசபையில், சர்வகலாசாலை மசோதாவொன்று பற்றி விவாதம் நிகழ்ந்தவருங்காலை அம்மசோவை எதிர்க்கும் உறுப்பினர் ஒருவர் கன்னிமேயோவின் புத்தகத்தின் ஒருபகுதியினைப் படித்தாராம். சர்வகலாசாலைகள் இந்தியாவின் வளர்ச்சியைத்தடை செய்துவிட்டன என்று கன்னிமேயோ கூறுவதில் உண்மையிருக்கலாம். ஆனல், அவரது நோக்கமும், அவர் கூறும் காரணங்களும் என்னஎன்பதுதான் கவனிக்கப்பட வேண்டும். உண்மையைவிட, அதைச் சொல்லும் நோக்கும்முறையும்தான் அநேக சந்தர்ப்பங்களில் முக்கியமாகும். இந்தியா முழுவதும் வெறுக்கும் ஒரு புத்தகத்தை ஒரு சட்டசபையில் ஒரு உறுப்பினர் எடுத்தாண்டதை 'ஒழுங்குதான்' என்று அச்சட்டசபைத் தலைவர் கூறிவிட்டார். என்றாலும், அது பொருத்தமற்றதுதான் என்று நாம் கருதுகிறோம்.

### தீர்மானம் நல்லதுதான்.

பெண்களைக் கோவில்களுக்குப் பொட்டுக்கட்டும் வழக்கத்தை நிறுத்த வேண்டுமென்று சட்டம் செய்ய, அரசாங்கத்துக்குச் சிபார்சு செய்வதாக, ஒரு பிரேரபணை டாக்டர் முத்துலட்சுமி அம்மாள் அவர்களால், சென்னைச் சட்டசபையில் கொண்டுவரப்பெற்று, ஒரே ஒருவரால்மட்டில் எதிர்க்கப்பட்டு, நிறைவேறியது. தீர்மானம் நல்லதென்றே நாம் கருதுகிறோம். ஆனல், அது செயலுக்கு வர வேண்டும். கோவில்களுக்குப் பெண்களைப் பொட்டுக் கட்டுதல், தீய வாழ்வை அவர்கட்கு நல்கும் வழக்கத்தில் இருந்துவருகிறது. கோவில்களுக்குப் பொட்டுக் கட்டுவது என்றால், பெண்களைத்தீய, மானமற்ற வாழ்க்கைக்குப் பலிகொடுப்பது என்பது பொருளாக, நடைமுறையில் இருந்து வருகிறது. எனவே, அதை ஒழிக்க வேண்டுவது அவசியம் என்பதை நல்லுணர்வுகொண்ட எவரும் மறுக்கமாட்டார். ஆனல், இதைப்பற்றிச் சட்டம் செய்வதால் மட்டில், இத்தீமை—பெண்கள் சிலர் மானமற்ற வாழ்வு வாழும் தீமை—ஒழிந்துவிடாது. நாணயமான வாழ்வை இப்பெண்களுக்கு அளிக்க, தொழில் ஸ்தாபனங்களும் காண வேண்டும். கதியற்ற பெண்களுக்கு உதவி செய்யும் ஸ்தாபனங்கள் ஏராளமாய்த் தோன்றினாலன்றி, இத்தீமை தொலையாது. எனவே, தீர்மானங்கள் செய்வதோடும், சட்டங்கள் இயற்றத்தூண்டுதலாயிருப்பதோடும் தமதுகடமை தீர்ந்துவிட்டதாக, தலைவர்கள் எண்ணிவிடாமல், இவ்விஷயம் பற்றி, பலவிதத்தும் ஊக்கத்துடன் உழைத்தல் வேண்டும்.

# தந்தி.

(ஊழியனுக்காக வந்த தந்தி)

பிணுக்கு பிரபவ ஐப்பசிமீ உ௨உ

உண்டியல்விலை நூற்றைம்பத்துநான்கு
ஈயம் விலை நூற்றிருபத்தொன்பது
ரப்பர் விலை எண்பத்துமூன்று

ரங்கூன், பிரபவ ஐப்பசி-மீ உ௨உ

| | |
|---|---|
| பவுன் | ௧௩—௧௦—௦ |
| நடப்பு வட்டி | ௦—௩௦—௦ |
| தவணை வட்டி | ௦—௬—௮ |
| படகு நெல் | ௧அஎ—௦—௦ |
| ரயில் நெல் | ௧எ௦—௦—௦ |
| ஸ்பெஷல் | ௪௫௦—௦—௦ |
| சிறியமில் அரிசி | ௪௬௦—௦—௦ |
| பெரியமில் | ௪௯௦—௦—௦ |
| மில்சார் அரிசி புழுங்கல் | ௫௧௦—௦—௦ |
| புழுங்கல் நசேன் | ௪௬௦—௦—௦ |
| எ. ஒன் குறுணை | ௪௦௦—௦—௦ |
| பி. ஒன் ,, | ௩எ௫—௦—௦ |
| மிளகாய். | அ௩—௦—௦ |
| மொச்சை | ௧௦௦—௦—௦ |
| தட்டை | ௫௨௫—௦—௦ |
| உளுந்து | ௪எ௫—௦—௦ |
| சிவப்புப் பீனிஸ் | உ௪௫—௦—௦ |
| வெள்ளை பீனிஸ் | உ௬௦—௦—௦ |
| பருத்திக்கொட்டை | ௧௦—௦—௦ |
| வெங்காயம் | உஉ—௦—௦ |
| சோளம் | ௩௦௦—௦—௦ |
| கொள்ளு | ௪௪௦—௦—௦ |

## கப்பல்

"எரின்புரா" கப்பல் இன்று சென்னைத் துறைமுகத்தில் உள்ளது. இம்மதி உ௬உ வெள்ளியன்று ரங்கூனுக்குப் புறப்படும்.

"தைரியா" கப்பல் நாளை சென்னைத் துறைமுகத்துக்கு வரும் இம்மதி உ௬உ வெள்ளியன்று பினங்குக்குப் புறப்படும்.

## கடிதங்கள்.

### ஏரியூர்.

பிரபவ௵ அற்பசி௴ ௧௨௨ திருப்பத்தூர் தாலூகா திருக்கோஷ்டியூருக்கு அடுத்த ஏரியூர் என்ற கிராமத்தில் ப்ராஞ்சு போஸ்டாபீஸ் அவ்வூர் கிராமவாசிகளின் முயற்சியால் திறக்கப்பட்டிருக்கிறது என்று வெ. ராம. ராகப்ப செட்டியார் எழுதுகிறார்.

### கொளும்பு.

காளிது ஐப்பசி ௮௨ மாலை ௫-மணிக்கு புதுக் கதிரேசன் கோவில் மேல் மாடியில் ஸ்ரீமான் வ. ராம. வ. லெட்சுமணன் செட்டியார் தலைமையில் பிச்சப்பா, சுப்பிரமணிடன் "காந்தியடிகள்" என்ற பொருள் பற்றிப் பேசினார்கள். ௯-மணிக்கு தலைவர் முடிவுரையுடன் கூட்டம் இனிது நிறைவுற்றது. அக்கூட்டத்திலே காந்தியடிகள் வருகையின்போது, கதர் நிதிக்குப் பணம் கொடுக்கும் விஷயமாய் நகரத்தார் கலந்து பேசினார்களென்று ஒரு கிருபர் எழுதுகிறார்.

### திருவிசநல்லூர் உற்சவம்.

திருவிடைமருதூருக்கு இரண்டு மைல் தூரத்திலிருக்கும் திருவிசநல்லூர் கிராமத்தில் அய்யாவாளுடைய புண்யோத்ஸவம் பிரபவ௵ ஐப்பசி௴ ௧௨௨ (௧எ-௧௧-உஎ) செவ்வாய்க்கிழமை ஆரம்பித்து கார்த்திகை மாதம் ௧௨ (உ௪-௧௧-உஎ) வியாழக்கிழமை அமாவாஸைதினம் கங்காஸ்நானம் நடக்கும். மேற்படி உற்சவத்தில் உலகப் கியாதிபெற்ற ராமாயண, பாரத, பாகவதம் முதலிய கிரந்தங்களில் உபந்நியஸிக்கக்கூடிய வித்வான்களும், பகவத் குணங்களை சுருதிலயபத்தமாய் உபந்நியஸிக்கக்கூடியவர்களும், ஸங்கீதவித்வத்சிரோமணிகளும், வீணை, வேணு பிடில், மிருதங்கம் முதலிய வாத்யங்களில் விசேஷ நிபுண மணிகளும், ஹாஸ்யரஸ வித்வான்களும் வந்திருந்து தங்கள் தங்கள் வித்தையால ஜனங்களுக்கு ஆனந்தமும், பக்தியும் பெருகும்படிசெய்து மேற்படி உற்சவத்தைப் பரிமளிக்கச்செய்து குருகிருபைக்கு பாத்திரர்களாவார்கள் என்று ஒரு அன்பர் அறிவிக்கிறார்.

### பெண்மக்கள் இந்தியச்சங்கம்.

மதுரை, 'பெண்மக்கள் இந்தியச்சங்க'க் காரியதரிசி அவர்கள் அறிவிப்பதாவது:— சங்கத்தின் பொதுக்கூட்டம் ஒன்று ஸ்ரீமதி ஹாஸ் அவர்களின் தலைமையில் நடைபெற்றது. அகில இந்தியப் பெண்கல்வி மகாநாட்டின் தமிழ் நாட்டு மகாநாட்டை நவம்பர்௴ உ௬-௨ மதுரையில் நடத்துவதென்று தீர்மானிக்கப் பெற்றது. ஒருவரவேற்புக் கமிட்டி அமைக்கப் பெற்றது. ஸ்ரீமதி கிருஷ்ணஸ்வாமி கமிட்டிக்குத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். மகாநாட்டின் உதவிக்காக ஒரு நாடகம் நடத்துவதாக வாக்களித்த 'ஜார்ஜ் மன்னர் நாடகச் சங்க'த் தாருக்கு வந்தனமளிப்பதாகவும், அதை விசேஷமாய் ஆதரித்து அதற்கு விஜயம் செய்ய அன்புடன் இசைந்த சிவகங்கை ராஜா அவர்களுக்கு நன்றியறிதலைத் தெரிவிப்பதாகவும் ஒரு தீர்மானம் நிறைவேறியது. மேற்படி நாடகச் சங்கத்தார் தங்கள் நடிப்பில் விசேஷம் பெற்ற "பாதுகாபட்டாபிஷேகம்" என்னும் நாடகத்தை நவம்பர்௴ ௧-௨ "மேற்குமாசி நாடகக்கொட்டகை"யில் நடத்துவார்கள். தமிழ் ஜில்லாக்கள் யாவற்றிலுமுள்ள பெண்கள் சங்கங்களில், தங்கள் பிரதிநிதிகளை மகாநாட்டுக்கு அனுப்ப விரும்புமவை, அவர்களது பெயர்களை "டாக்டர் ஸ்ரீமதி அன்னுதாமஸ், எக, தமிழ்ச் சங்கவீதி, மதுரை" என்றவிலாசத்துக்குத் தெரிவிக்கக் கோருகிறோம். மகாநாட்டின் விவரங்கள் பத்திரிகைகளில் வெளியிடப்படும்.

### ஓர் எச்சரிக்கை.

சர்க்கா சங்கக் காரியதரிசி திரு. எஸ். ராமனுதன் அவர்கள் அறிவிப்பது வருமாறு:—

"திருப்பூர் கம்போடியா காட்டன் பிளாண்டிங் அண்டு கதர் மேனிபாக்டரிங் கம்பெனி லிமிடெட்" என்று பெயர் வைத்துக்கொண்டு சிலர் மஹாத்மா காந்தியடிகளின் பெயராலும் கதரின் பெயராலும் பங்குத்தொகைகளுக்கு அநேக பத்திரிகைகளில் விளம்பரம் செய்து வருகின்றனர். இதைப்பற்றி விசாரித்த அளவில் இந்தக்கம்பெனியார் இதுவரையில் எவ்விதக் கதர் வேலையும் செய்ததில்லை யென்றும், இந்த கம்பெனியை ஆரம்பித்தவர்கள் கதர்த்தொழிலின் அனுபவமே யில்லாதவர்களென்றும் தெரிகிறது. கடன் தொந்தரவினால் தங்களுடைய நிலங்கள் பந்தகத்தில் அகப்பட்டு மீட்க வழியில்லாமலிருக்கும் சிலருடைய சொந்த நன்மையை உத்தேசித்து இந்தகம்பெனி ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. இந்தக்கம்பெனிமூலம் கதர்வேலை நடைபெறுமென்று நம்ப இடமில்லை. ஏதோ பந்தகத்திற்கு உட்பட்டிருக்கும் நிலங்களில் பருத்தி சாகுபடி செய்து அந்தப்பருத்தியை நூற்று, நெய்யப்போவதாகச் சொல்லப்படுகிறது. இது அனுபவத்தில் நடக்கிற காரியமல்ல. இந்தக் கம்பெனியார் அகில பாரத சர்க்கா சங்கத்திலிருந்து சாதாரணக் கதர் உற்பத்திக்காரர்களுக்கு அளிக்கப்படும் அத்தாக்ஷிப் பத்திரம் கூடப்பெறவில்லை. இந்தக் கம்பெனியின் மாதிரியும், நோக்கமும் சந்தேகத்திற் கிடந்தருகிறபடியால் பொது ஜனங்கள் இதை ஒரு கதர் ஸ்தாபனமென்று நம்பிப் பணங்கொடுத்து விடாமலிருக்க எச்சரிக்கப்படுகிறார்கள்.

---

யுனைடெட் இந்தியா லைப்
# அஷ்யூரன்ஸ் கம்பெனி
(லிமிடெட்.)
தலைமை ஆபீஸ்—மதராஸ்.
ஸ்தாபனம் 1906-ம் ௵.
சென்னைமாகாணத்திலுள்ள லைப் அஷ்யூரன்ஸ் கம்பெனி, இதுவே,
அக்கிராசனர்:—
ஸர். எம். ஸி. டி. முத்தையா செட்டியார் K. T., M. L. A.
சமீபத்தில் 5-வருஷத்திற்கென்று விநியோகிக்கப்பட்ட
போனஸ் அஷ்யூரென்ஸ் தொகை ரூ. 1000-க்கு ரூ. 75.
ப்ரிமியம் மிதமானது நிபந்தனைகள்—சுலபமானவை.
க்ளேம் பணம் கொடுப்பதை ஒத்திவைப்பது—இதில் ஓர் விசேஷம்.
பாத்யதைகளை உடனே கவனிப்பது—ஓர் முக்கிய அம்சமாகும்.

"இந்தியாவிலே மிகவும் உறுதியானதும், பணத்தை யுடையதும், மேலான நிர்வாகத்திறமையுடையதும் மிகச் சிக்கனத்துடன் கூடியதுமான கம்பெனிகளில் இதுவுமொன்று. லைப் அஷ்யூரன்ஸ் கம்பெனிகளில் முதன்மையானவற்றில் இது ஒன்றாகும்" என்று "பார்வார்டு" வருஷ அநுபந்தப் பிரசுரத்தில் காணப்படுகிறது.

விவரங்களுக்கு அடியிற் கண்டவருக்கு எழுதவும்:—
எம். ராமமூர்த்தி, சீப் ஏஜெண்டு, ராமநாதபுரம் அண்டு புதுக்கோட்டை, காரைக்குடி.
மானேஜர்:— ஸ்டார் அண் கம்பெனி.

---

வெளிவந்து விட்டது! மூன்றாம் பதிப்பு!! வெளிவந்து விட்டது!!!
ஆசிரியரின்றி ஆங்கிலந் தெரிந்து கொள்ளும்
## ஆனந்த ஆங்கில பாஷா போதினி.
எம். ஏ. எல். டி. பட்டம் பெற்ற ஆங்கில போதகாசிரியராகிய திருவாளர் எம். ஷண்முகசுந்தர முதலியாரவர்களால் செய்யப்பெற்ற உயர்ந்த திருத்தங்களோடும், சிறந்த அமைப்புகளோடும், நிறைந்த போதனைகளோடும் கூடியது.

TRADE MARK

இது 800-பக்கங்களுக்கு மேலுள்ளது; அழகிய முழு கலிகோ பைண்டு செய்யப்பட்டது.

16 ஆப்டோன் படங்களுடன் கூடியது. விலை ரூபா 2—0—0.

ஆனந்தபோதினிச் சந்தாதாரர்களுக்கு 15-11-27 வரை ரூ. 1—4—0.
போஸ்டேஜ் அணா 8.

இது இங்கிலீஷ் பாஷையை எளிதில் போதிக்கத்தக்கது. இது வரை வெளிவராத நூதன பாட முறைகளுடன் வெளியிடப்பட்டிருக்கிறது. இன்னும் இதில், ஒரு ரூபா முதல் ஆயிரம் ரூபா வரை சம்பளப்பட்டிக் கணக்கு, வட்டிக் கணக்கு, ஒவ்வொரு தேசத்திலும் ஏற்படும் மணி வித்தியாசம், அன்னியதேச நாணய மதிப்பு முதலியன வெல்லாம தெளிவாக விளக்கிக் காட்டப் பட்டிருக்கின்றன. இதனைப்படிப்பவர் எந்த ஆசிரியருடைய உதவியுமின்றி சில தினங்களில் ஆங்கில பாஷையில் தேர்ச்சியடைந்து நன்முகப் பேசவும், படிக்கவும், எழுதவும் தெரிந்து கொள்ளலாம்.

ஷை தெலுங்குப்பதிப்பு ரூபா 2—0—0
ஆனந்தபோதினி ஆபீஸ், தபாற்பெட்டி நெ 167, மதராஸ்.

---

## வியாபாரத்திற்கழகு விளம்பரமே.

Kesari's Lodhra
A BOON TO WOMEN
No more worry! No more fear!
There the Angel doth appear!
ASK YOUR CHEMIST OR
KESARI KUTEERAM, EGMORE. MADRAS.

ஸ்திரீகளுக்குள்ள சகல கஷ்டங்களையும் நிவர்த்திப்பது எது?
கேஸரியின்
## "லோத்ரா."
ஆனால் அவர்கள் என்ன சொல்லுகிறார்கள்?

☞ ஸ்ரீமதி மிஸஸ் கர்த்தா எழுதுகிறார், "நான் ௧௦-வருஷ காலமாய் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்த ருது சூலை வயிற்றுவலி கேஸரியின் லோத்ராவை உபயோகித்த பிறகு அத்யாச்சர்யமாய் நிவர்த்தியாயிற்று."

ஸ்ரீமதி மிஸ். கோபால பணிக்கர் எழுதுவதாவது. "லோத்ராவின் உபயோகத்தால் நானும் என் சகோதரியும் ருது சூலை கஷ்டத்தினின்று நிவர்த்திக்கப் பட்டோம்."

இது எங்கு கிடைக்கும்?
எல்லா மருந்து ஷாப்புகளிலும்,
## கேசரிகுடீரம்,
ஆயுர்வேத ஔஷதசாலை, எழும்பூர், மதருஸ்.
என்றுமிடத்திலும் கிடைக்கும்.

---

மலையாளம் உயர்ந்த ஜவுளிகள்
பட்டு தனுசுகள்.
விலைகள்ரொம்பவும் குறைந்துவிட்டன
இனம்! விலை விபர ஜாப்தா இனம்!!
எம். ஆர். வீவிங்பாக்டரி,
சாலைதிருவனந்தபுரம், (தென்னிந்தியா)

---

Reload Now—here's how!

THERE are hundreds of uses for your flashlight. Reload it now with new, strong Eveready "Unit Cell" Batteries — keep it always ready for use.

UNIT CELL

EVEREADY
Flashlights & Batteries
—they last longer
C. KRISHNASWAMY NAIDU.
2-105 ARMENIAN STREET, MADRAS.

---

ஒரே வேளையில் வாலிபம்
## சித்த மதன கல்பம்,
இழந்துபோன தாது விருத்தியையும் நரம்புத் தளர்ச்சியையும் ஒரேமாத்திரையில் உண்டாகும். நரம்புத் தளர்ச்சி கை கால் இடுப்பின் அசதி நடுக்கம் கண் எரிச்சல் முதலியவை அடியோடு போக்கும், இழந்தனம் நீங்கி களையில்லா சக்தியை உண்டாக்கும். ரத்தத்தை சுத்திசெய்து திரேகம் திடப்படும் அநேகநற்சாக்ஷிகளையுடையது. 14-மாத்திரைகள் ரூ. 1—0
கெமிகோஹெர்பால் பார்மஸி
35 தங்கசாலை தெரு
பார்க்டவுன் மதருஸ்.

---

இனம்! இனம்!!
சாரவிவேகி, சதாநந்தன் சம்பாஷணை "கிழவன் குமாரனன்" இவ்விரண்டு கதைகள் அடங்கிய புத்தகம் தங்கள் விலாசம் தெரிவித்தால் இனமாக அனுப்புவோம்.
ஸ்ரீ சாதுஇரத்தின சற்குருபுத்தகசாலை, பார்க்டவுன், (P. O.) சென்னை.

---

# சரீர மர்ம சாஸ்திரம்.
இதில் ஸ்திரீ புருஷ லக்ஷணங்களும், அவர்களது சரீர அமைப்பும் சிசு உற்பத்தி விவரமும், மகாரிஷிகளால் மர்மமாக ஆதியில் எழுதிய இல்லற இன்பங்களும், விவாகமானவர்களுக்கும் இனிமேல் விவாகம் செய்துகொள்ளும் சிறுமிகளுக்கும் இன்றியமையாத நூல், 64 படங்களுடன் 8-ம் பதிப்பு. புத்தகம் விலை ரூபா 1.
மாணிக்க விலாசம் பிரஸ், 12, அருணாசல முதலி வீதி, சென்னை.

---

## ஏஜெண்டுகள் தேவை.
ஊழியனுக்குச் சந்தா சேர்க்கவும், விளம்பரங்கள் சேர்க்கவும் ஏஜண்டுகள் ஆங்காங்கு தேவை. தக்க கமிஷன் கொடுக்கப்படும். மற்ற விபரங்கட்குக் காரியஸ்தருக்கு எழுதித் தெரிந்துகொள்ளவும்.
காரியஸ்தர், "ஊழியன்"
காரைக்குடி.

---

சிரிப்பு! ஓயாச் சிரிப்பு!!
சிரித்து சிரித்து வயிறு புண்ணாய் விட்டதென்று ஒருவர் எழுதுகிறார்.
## முத்துமாமா.
(2-ம் பதிப்பு)
நேயர்களே! இந்தக் கதையைப் படித்து விட்டால் நீங்கள் சாப்பிடும்போதும் சிரிப்பீர்கள், தூங்கும்போதுகூட சிரிப்பீர்கள். வேண்டுவோர் 4½ அணா ஸ்டாம்பு அனுப்பவும். எந்த தேசத்து ஸ்டாம்பாயிருந்தாலும் அனுப்பலாம்.
வாசன் புஸ்தகசாலை,
97, அண்ணாபிள்ளை தெரு, மதராஸ்.

---

நூதன ஜர்மன் எலக்டிரிக் விளக்கு.
இதை மேஜையின்பேரிலும், சுவற்றிலும் வைக்கலாம். இராத்திரியில் படுக்கையிலிருந்தபடியே விளக்கை இதில் கண்ட கயிற்றின் (Wire) உதவியால் நிறுத்தவும் செய்யலாம், புயற்காற்று அடித்தாலும் எரியும். பிரகாசம் கண்ணைப் பறித்துக் கொண்டு போகக்கூடியது. விசேஷ காலங்களில் வைத்தால் திரளான ஜனங்கள் அதிசயத்தைப் பார்க்கக் கும்பலாகக் கூடிவிடுவார்கள். மிக ஜாக்கிரதையாக பாக்கிங் செய்தனுப்பப்படும். குறைந்த விலை 4—8—0. தபால் செலவு 0—8—0.
தீ. பான்ஸி வாட்சு அவுஸ்,
15 A-மீட் ஜி. டி. மதராஸ்.

---

நவீனகதா புத்தகசாலை
நவீன
நாவல்கள்,
அருமையான கதைகள்,
அற்புதமான
சரித்திரங்கள்,
வேதாந்த சித்தாந்த
இலக்கண இலக்கிய
சங்கித கிரந்தங்களும்,
மந்திரிககாவியங்களும்
பள்ளிக்கூட
புத்தக தினுசுகளும்
கிடைக்கும்.
விபரம் தெரிய
விலை ஜாப்தா இனம்.
மாங்கமாரி வீதி. இரங்கோன்.



# அபூர்வசிகிச்சை
## அதிசய குணந்தரக்கூடிய மருந்துகள்.
தேர்ச்சிபெற்ற மலையாள வைத்தியர்களைக் கொண்டு, தாரை, பிழிச்சல், கிழி முதலிய பிரசித்திபெற்ற ஆயுர்வேத முறைப்படி, சகலவிதமான வாதரோகங்களுக்கும் இந்த வைத்திய நிலையத்தில் சிகித்சை செய்யப்பெறும். வாதரோகங்கள் எவ்வளவு நீடித்தகாலமானவையானாலும் சரி, எவ்வளவு கடினமானவையானாலும்சரி, குணமாவது திண்ணம். அற்புத குணத்தைத் தரக்கூடிய வைத்தியம் இருக்கும்பொழுது, வாதரோகிகள் ஏன் கஷ்டம் அடைந்துகொண்டிருக்க வேண்டும்? ஆகையால் வைத்தியம் செய்துகொள்ள முந்துங்கள்.

## இன்னும் திட்டமாக குணமாகும் வியாதிகள்.
(1) மேரோகங்கள், கிரந்திரோகங்கள், சூலைரோகங்கள்
(2) இருமல், இழைப்பு, சுவாசகாச முதலிய கபரோகங்கள்.

செலவு முதலிய தகவல்களை நேரில் அறிந்துகொள்ளவும்.

ஆயுர்வேத சித்தவைத்திய நிலயம்,
நாச்சியார்புரம் (ராமநாதபுரம் ஜில்லா.)

---

புதிய சங்கீத புஸ்தகம்.
பிரசித்திபெற்ற நூலாசிரியர் வித்வான் கே. வி. ஸ்ரீநிவாசய்யங்கார் இயற்றியது.
## ஸங்கீத சிந்தாமணி.
விலை ரூபா 3—0—0
இது ஸங்கீத வித்தியார்த்திகட்கும், உபாத்தியாயர்கட்கும், பாடகர்கட்கும் இன்றியமையாத ஓர் அரிய புத்தகம்.
இதுவரையிலும் வெளிவராத தியாகராஜ கீர்த்தனைகள், இன்னும் அநேக பிரசித்தி பெற்ற வித்துவான்களின் நூதன கீர்த்தனைகள் முதலியவைகள் ஸ்வரதாளங்களுடனும் ராகலக்ஷணங்களுடனும் அச்சிடப்பட்டிருக்கின்றன.
குறிப்பு:—அக்டோபர் மாதம் 31-ம் தேதிக்குள் இப்பத்திரிகையின் பெயரைக் குறிப்பிட்டு ஆர்டர் செய்பவர்கட்கு தபாற் செலவு இனம்.
முழு விவரத்துக்கு கீழ் காணும் விலாசத்துக்கு எழுதவும்.
எம். எஸ். ராமுலு கம்பெனி,
இராயபுரம், மதராஸ்.

---

படுக்கை அறையில்.
சிங்காரிக்கத்தக்க இன்பமளிக்கும் போட்டோ படங்கள்.
12 ரகங்கள் கொண்ட லீலாவிநோத படங்கள் அடங்கிய போட்டோ புத்தகம் (Photo album) 1-க்கு விலை ரூ. 2.
PHOTO ALBUM
மதராஸ் மெயில் ஆர்டர் கம்பெனி,
மிண்டுபோஸ்டு, மதராஸ்.

---

தேவை.
எவ்வளவு நாள் பட்ட எந்தவித வியாதியினால் கஷ்டப்பட்டுக்கொண்டிருந்த போதிலும் சரி, உடனே நமக்கு ½ அணா ஸ்டாம்புடன் விவரம் அனுப்புக.
ப்ரொபஸர் C/o ஊழியன் காரைக்குடி.

---

இனம்! இனம்!! இனம்!!!
துளிர்ச்சி பொருந்திய ஓர் மூக்குக்கண்ணாடியும் ஓர் பவுண்டன் பேனாவும் இனமாய்த் தரப்படும்.
(தானாக வரும் அதிர்ஷ்டத்தைக் கைவிடாதீர்கள்.)
22-காரட் ரோல்டு கோல்டு கோல்டன் டையல்.
எங்களுடைய ரிஸ்ட் வாட்சு கடியாரம் 10 வருடத்திற்கு காரண்டி என்று கேஸின் உள்புறத்தில் ஸ்டாம்பு குத்தியுள்ளதும், ஆண் பெண் இருவர்களும் அணியக்கூடிய பூஷணங்களில் இது ஓர் சாபூஷணமாக ஜொலித்து, சரியான காலத்தைக் காட்டக்கூடியதும், வெகு அழகையும் மதிப்பையும் தரக்கூடியதுமான இயந்திரம் இதுவே. இது கைதேர்ந்த மெகானிக்கல இஞ்சினீயர்களால் அதிக முயற்சியோடு செய்யப்பட்டுள்ளது. ஒவ்வொரு கடியாரத்தையும் பரீக்ஷித்து அனுப்புகிற வழக்கம் எங்கள் கம்பெனியைவிட்டு விலகவில்லை என்பது திண்ணம். இதன் விலை ரூபா 7—0—0.
விலாசம்:— ஓவர்ஸீ ஸ்குவிஸ் வாட்ச் கம்பெனி,
தபால்பெட்டி நெ. 371, மவுண்ட்ரோட், மதராஸ்.

---

டாக்டர் ஜீ. பி. என்பவரின்
## சுகந்த மூக்குத்தூள்.
இதை உபயோகித்தால் ஜலதோஷம், ஒற்றைத் தலைவலி மண்டைக் குத்தல் உள்பட கண்டத்திற்கு மேற்பட்ட சகல வியாதிகளையும் வெகு சீக்கிரத்தில் கண்டிக்கும்.
புட்டி 1-க்கு விலை அணா 4.
மொத்த வியாபாரிக்கு விலை சகாயம் செய்யப்படும்.
குருபசவா அண்டு கம்பெனி
(லிமிடெட்.)-
பார்க்டவுன், சென்னை.
தந்தி விலாசம்:—"மெடிகேட்"
தபாற் பெட்டி நெ. 510.
(ரிஜிஸ்டர் டிரேட் மார்க்.)

The New DODGE BROTHERS' Engine gives

**POWER! SILENCE! ECONOMY!**

தென் இந்தியா முழுமையும் கியாதியும்,
நற்பெயரும் எடுத்துக்கொண்டு வருகிற

# டாட்ஜ்.



பவுன் மாற்றுவதுபோல் நினைத்ததினம் பணமாகக் கூடியதும், அமெரிக்காவிலிருந்தே மாக்னடோ வைத்துவருவதும், 4 சிலிண்டர் கார்களில் ஏராளமான புழக்கத்துடனும், (6 சிலிண்டர் கார்களிலுள்ள புழக்கத்துக்குக் குறையாமலும்) விலையும் குறைவுள்ளதாகவுமிருக்கின்றன.

**வில்லீஸ்னயிட்கார்களும், ஓவர்லாண்டு 4, 6, சிலிண்டர் புதிய கார்களும் காரைக்குடியில் தயாரிலிருக்கின்றன.**

எங்கள் கார்களெல்லாம் ஆரக்கால் சக்கிரங்களுள்ளவைதான். பிளேட் சக்கிரங்கள் அல்ல.

கார்கள் டிரயல் பார்ப்பதற்கும், விலை விபரங்கள் தெரிந்து கொள்ளவும், மகர்நோன்பு அக்கிரகாரம், மகா-ா-ா-ஸ்ரீ சின்னய்யா அய்யரவர்கள் பத்மவிலாஸ், மாடி ஆபீசில் தெரிந்து கொள்ளலாம்.

சேஷசாயி பிரதர்ஸ் லிமிடெட், (காரைக்குடி,)

டிஸ்டிரிக்ட் டீலர்ஸ்.

**ADDISON & Co., Ld., MADRAS.**

ராய. சொக்கலிங்கனுல் காரைக்குடி ஊழியன் அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பெற்றது.

